Regd. No. 2975

ஓ

# ஸ்ரீ ராமாநுஜன் - 356

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்.

# SRI RAMANUJAN

Editor

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-6315[illegible]

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. [illegible]



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பிங்கள ஸு தை மீ 1078 பிப்ரவரி

# அம்பத்தூரில் சதாபிஷேக மஹோத்ஸவ நிகழ்ச்சி (30-1-78)

—*K. B. தேவராஜன்.*

ஸ்ரீமதுபயவே A. K. (அகரம் கந்தாடை) சடகோபாசாரியர் ஸ்வாமியை யறியாத ஸ்ரீவைஷ்ணவர்களில்லை. Bombay மஹாநகரத்தில் பலவருடங்கள் சிறந்த உத்யோக பதவியில் வாழ்ந்து விச்ராந்திபெற்று இருபது வருஷகாலமாய் அம்பத்தூரில் சொந்தமாகத் திருமாளிகை அமைத்துக்கொண்டு வாழ்ந்துவருகிறார். இந்த ஸ்வாமிக்கு, நிகழும் பிங்களஹூ தைமீ சித்திரா நக்ஷத்திரத்தில் எண்பது பிராயப் பூர்த்தியை முன்னிட்டு ஸதாபிஷேக மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெற்றது. முன்னுடி ஐந்துநாள் அருளிச்செயல் ஸேவாகாலமும் வேதபாராயணமும் நடைபெற்றன. பதினைந்து ஸ்வாமிகள் கோஷ்டியில் ஸேவை ஸாதித்தனர். சதாபிஷேக தினத்தன்று ஸ்ரீ உ. வே. காஞ்சீ ஸ்வாமி, ஸ்ரீ. உ. வே. அனந்தாண்பிள்ளை அக்காரக்கனி ஸம்பத் குமாராசார்ய ஸ்வாமி இருவரும் எழுந்தருளியிருந்து அனுக்ரஹித்தது குறிப்பிடத்தக்கதாகும். திவ்யதேசங்களிலிருந்து மரியாதைகள்வந்து தம்பதிகள் அனுக்ரஹிக்கப் பட்டனர்.

ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி அன்றைய நக்ஷத்திரத்தை ஸூசிப்பிக்கும் "நத்யா நக் யாககாரி" என்னும் நக்ஷத்ரமாலிகை ச்லோகத்தை உபந்யஸித்து ஸ்ரீ சடகோபாசார்ய ஸ்வாமிக்கும், அவர் குமாரர்களுக்கும் விசேஷமாக மங்களாசாஸனம் பண்ணியருளினார். ஸ்வாமிகளுக்கு ஸம்பாவனைகள் ஸமர்ப்பிக்கப்பட்டு கோஷ்டி முடிவு பெற்றது.

## அம்பத்தூரில் மற்றொரு நிகழ்ச்சி

ஸ்ரீமான் A K. சடகோபாசார்ய ஸ்வாமியால் ஸ்தாபிதமான டிவைன் ஸயின்ஸ் ட்ரஸ்டின் (தைவ ஞான நிதி) ஆண்டுவிழா 22—1—78 ஞாயிறு அன்று மாலை 4 மணிக்கு நடைபெற்றது. ஸ்ரீ உ. வே. வாகம்ருதவர்ஷி வேளுக்குடி K வரதாசார்ய ஸ்வாமி அக்ராஸநம் வஹித்தார். இந்த ட்ரஸ்ட்டின் அம்பத்தூர் பாடசாலை மாணவ மாணவியரின் ஜிதந்தே ஸ்தோத்ர, முகுந்தமாலை, ஸ்ரீபகவத்கீதை அனுஸந்தானத்துடன் நிகழ்ச்சி தொடங்கிற்று. இந்த ட்ரஸ்ன் ஸ்தாபகர் ஸ்ரீ சடகோபாசார்ய ஸ்வாமி ட்ரஸ்டினைப்பற்றிச் சில வார்த்தைகளைக்கூறி வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசினார். பின்பு சிரஞ்ஜீவி . கிருஷ்ணன் (ஸ்ரீ வேளுக்குடி ஸ்வாமியின் குமாரர்) ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமத்தைப்பற்றி உபந்யாஸம் நிகழ்த்தினார். பின்பு ஸ்ரீ வேளுக்குடி ஸ்வாமி "முனைக்கதிரை" என்னும் திருநெடுந்தாண்டகப் பாசுரத்தையும் "பள்ளியிலோதி" என்னும் பெரிய திருமொழிப் பாசுரத்தையும்கொண்டு மாணவ மாணவியருக்கும் ட்ரஸ்ட்டுக்கும் மங்களாசாஸனம் பண்ணியருளினார். ஸ்ரீமான் T K சேஷாத்ரி, (அமைப்பாளர், ஸ்ரீ விஷ்ணு ஸ்ஹஸ்ரநாமப் போட்டிக் கமிட்டி) அவர்கள் தொடர்ந்து இரண்டாம் முறையாக இவ்வருடத்திற்கான ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமப் போட்டிக்கான சுழற்பரிசை வழங்கினார். ஸ்ரீ உ. வே. காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி அனுப்பியருளின மங்களாசாஸன சுலோகங்கள் ஸபையில் வாசிக்கப்பட்டன. மாணவ மாணவியருக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. இப்பாடசாலையின் ஆசிரியரும், டிரஸ்டின் டைரக்டருமான ஸ்ரீமான் K. B. தேவராஜன் நன்றியுரை கூறினார். மாணவ மாணவியரின் ஸ்ரீவேங்கடேச மங்கள அனுஸந்தானத்துடன் விழா இனிது முடிந்தது.

# ஸ்ரீ ராமாநுஜன் 356



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
மஹாவித்வான் அண்ணங்கராசாரியர்

தொகுதி 30 | பிங்களஸ்ல தைமீ 10—2—1978 | பகுதி—8


# மந்த்ராதிய விஜ்ஞாபனம்

## — எதையும் கண்டனமென்று நினைக்கலாகாது, உத்போதனம் —

அடியேன் இளமையில் காளிதாஸ பவபூதி முராரி கவிகளின் க்ரந்தங்களில் மிக்க ருசியோடு போது போக்கினவன். மைஸூரில் எழுந்தருளியிருந்தவரும் ஸுப்ர ஸித்த வித்வத் ஸார்வபௌமருமான ஸ்ரீமதுபயவே. கஸ்தூரி. ரங்காசார்யஸ்வாமி என்னுடைய பன்னிரண்டாவது பிராயத்தில் காஞ்சீபுரத்திற் கெழுந்தருளி, அப்போது தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்து கொண்டிருந்த சடகோபநிலய பாடசாலையில் வித்யார்த்தியா யிருந்துவந்த அடியேனை வித்யோல்லாஸினீ ஸபையின் மூலமாகப் பரீக்ஷித்து மனமுவந்து ஊருக்கெழுந்தருளின பிறகு அடிக்கடி ஸ்ரீமுகங்கள் ஸாதித்துக் கொண்டிருந்தார். ஒரு ஸ்ரீ முகத்தில்—அஸ்மதாசார்ய ஜகத்குரு கா.திஸ்வாமி அச்சிட்டிருந்த ஒரு புத்தகத்தை வாங்கியனுப்பும்படி நியமித்திருந்தார். அப்படியே வாங்கியனுப்பிவிட்டு *யந்மாம் விதேய விஷயே ஸபவாந் நியுங்க்தே ஸ்நேஹஸ்ய தத் பலமஸௌ ப்ரணயஸ்ய ஸார:* என்கிற [பவபூதி-மாலதீமாதவீய] ச்லோகத்தை யெழுதி யிருந்தேன். அதைக் கடாக்ஷித்தருளின அந்த மஹா ஸ்வாமி உடனே பதில் ஸ்ரீமுகமருளுகையில் "இந்த மாலதீமாதவீய ச்லோகம் நானும் வாசித்ததே; நீர் இதை ஸமயத்தில் உபயோகப் படுத்தினது என்னை என்னமோ பண்ணுகிறது" என்று தமிழிலேயே எழுதிவிட்டுத் தொடர்ந்து ஆசீர்வாத மொழிகளாகப் பலபலவும் எழுதியிருந்தார். இது எழுபத்தைந்து ஆண்டுகட்கு முன்பு நடந்த விஷயம். அதன்பிறகு பலபலமஹான்களின் மங்களாசாஸனங்களைப் பெற்றிருக்கிறேன். ஒருவரிடத்திலும் மாச்சரிய முடையேனல்லேன். வித்வான்களிடத்தில் ஸஹஜமாகவே ஹ்ருதயபூர்வகமான பக்தியுடையேன். இதில் கலாபேதம் பாராட்ட ப்ரஸக்தியேயில்லை. காளிதாஸாதிகவிகளின் வாக்குக்கள் கண்டபாடமா யிருப்பதால்

சாகுந்தல நாடகத்திலுள்ள ஒரு வாக்கியம்—"விவக்ஷிதம் ஹி அநுக்தம் ஆகுவீ கரோதி ஹ்ருதயம்" என்பது என்பக்கல் அதிகமாக உபயோகப்பட்டு வருகிறது.

வித்யார்த்தி தசையில், விஜ்ஞாந சிந்தாமணி–ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா–ஸம்ஸ்க்ருத வாதிநீ–மித்ரகோஷ்டீ–விசக்ஷணு–ஸஹ்ருதயா—என்றிப்படி பலபல ஸம்ஸ்க்ருத பத்ரிகைகள் நடந்துகொண்டிருந்தன. அவற்றிலெல்லாம் என்னுடைய ஸம்ஸ்க்ருத வியாஸங்கள் நிரம்ப வெளிவந்துகொண்டிருந்தன; பெரும்பாலும் *விவக்ஷிதம் ஹி அநுக்தம்* என்கிற மேலே குறித்த வாக்யமே மகுடமாயிருக்கும். சொல்லவேணு மென்று தோன்றியதைச் சொல்லாமல் விட்டிட்டால் மேலே ஒரு காரியத்திலும் புத்தி செல்லாது என்பது அந்த வாக்யத்தின் தேர்ந்த கருத்து. இதற்குமேல் அடியேன் எழுத உத்தேசித்ததைத் தற்காலம் விட்டிட்டு ஸந்தோஷாவஹமான விஷயமொன்று வரைகின்றேன். (விட்டிட்டதை அடுத்த பக்கத்திலிருந்தே காணலாம்.)

ஸமீபத்தில் வெளிவந்த (தை மாதத்து) ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில்—'ஸ்ரீ அழகியசிங்கரின் அருள்மொழி" என்று மகுடமிட்டு, திருப்பாவை முதற் பாசுரத்தைப் பூர்த்தியாக வெளியிட்டு அதற்குமேல்—

> இந்தப் பாசுரத்துக்குப் பெரியோர்கள் வேதாந்தார்த்தங்களைப் பாரோர் புகழப் பலபடியாக உபதேசித்திருக்கிறுர்கள். ஆண்டாள் அநுக்கிரஹத்தால் இந்தப் பாசுரம் விஷயமாக அறிந்த ஓர் அர்த்தத்தை அவள் திருவுள்ளப்படி, சாஸ்திர ஸம்மதமானமுறையில் எழுதிச் சிறியோர்களுக்கும் பெரியோர்களுக்கும் ஒருவிதமான ஆனந்தத்தை உண்டுபண்ணலாம் என்று நினைத்து ஆரம்பிக்கி றேன். ஸபலமாக முடிய ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் திருவடிகளைத் தியானம் செய்கிறேன்" என்றருளிச்செய்து, மார்கழித்திங்களென்கிற முதற் பாட்டுக்கு *தேனும் பாலும் நெய்யுங் கன்னலும்அமுதுமொத்ததாய் அமுதிலுமாற்ற வினிதான விவரணத்தை "அநாக்ராதாவத்யம் பஹுகுணபரீணுஹி மநஸோ துஹாநம் ஸௌஹார்தம்......அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:" என்னும்படியான ஸ்ரீஸூக்தி களாலே செய்தருளி, முடிவாக—

> "ஆண்டாள் திருப்பாவைக்கு மஹநீயர்களான பெரியோர்களும் ஆசாரி யர்களும், அநேகவித உல்லேகங்களுடன் பதம்பதமாக எடுத்துத் தாத்பர்யமும், ஸ்வாபதேசமும் ரஸிகஜந சித்தரஞ்ஜகமாகச் சொல்லியிருக்கிறுர்கள் அவற்றை ஸேவித்துத் தந்யனுனேன். அந்த வியாக்கியானங்களையும், ஸ்வாபதேசங்களை யும் ஸேவித்து ஆனந்தம் அடைந்தவர்கள் பலர் இருக்கிறுர்கள் என்பதில் எள்ளளவும் ஸந்தேஹமில்லை. ஆகையால் அவர்கள் சொன்ன விஷயங்களையே மறுபடி எழுதாமல் அவர்கள் அபிப்பிராயத்துக்கு விரோதமில்லாமல், ஸித்தாந் தத்திற்கும் விரோதமில்லாமல் ஆண்டாள் தோன்றப் பண்ணியபடி எழுதியுள் ளேன்" என்று தலைக்கட்டப்பட்டிருக்கின்றது.

அடியேனுக்குப் புரோபாகி (தோஷைகத்ருக்) என்றொரு அபப்ரதை யுண்டு. அடியேன் அதை இல்லைசெய்ய முடியாது. ஆனுல், குற்றங்குறைகளைத் தேடிப் பிடித்து, பழிப்பாக எழுதவேணுமென்கிற கெட்ட எண்ணம் அடியேனுக்குக் கனவி லும் கிடையாது. வடமொழியிலோ தென்மொழியிலோ வெளிவரும் வியாஸங்களில்

குற்றங்குறைகளிருந்தால் அவை அடியேனுடைய ஸ்தூலத்ருஷ்டியிலேயே படாமற் போகாது. பட்டே தீரும். அவற்றைக் காணுக் கண்ணிட்டு உபேக்ஷித்து விடுவது முண்டு. உலகுக்கு உண்மை தெரிவதற்காகத் தவறுகளையெடுத்துக்காட்டி உபகரிப்பது முண்டு. அது லோகஹிதத்திற்காகவென்பதை மத்யஸ்தத்ருஷ்டிகளான மஹான்கள் சிலரே அறிவர். அதையும் இந்த வியாஸத்தின் தொடர்ச்சியாகவே காட்டுவோம். அதுநிற்க.

ப்ரக்ருதம் ஸ்ரீமத் அழகிய சிங்கரருளிய திருப்பாவை முதற் பாசுரவிசேஷார்த்தக் கட்டுரையை அடியேன் இருமுறை ஸேவித்து அடைந்த ஆனந்தம் நைஷத காவ்யம் இரண்டாவது ஸர்க்கத்தின் முதல் ச்லோகத்தை யிட்டே தெரிவிக்க வேணும். (அதாவது) *வசஸாமபி கோசரோ ந யஸ் ஸ தமாநந்தமவிந்தத த்விஜ:* என்பது. ஸ்ரீமத் அழகியசிங்கர் பூர்வாச்ரமத்தில் பலவிடங்களில் இதிஹாஸபுராண–உபாக்கியானங்களை அத்யாயக் கணக்கிலும் ஸர்க்கக்கணக்கிலும் சுலோகங்களை கங்காப்ரவாஹமாக உபந்யஸித்து விசேஷார்த்தங்கள் ஸாதிக்க அடியேன் உடன்சென்று கேட்டதுண்டு. இப்போது இந்த வியாஸத்தை ஸேவித்தபோது அதெல்லாம் நினைவுக்கு வந்து மனமுருகிற்று; மற்ற இருபத்தொன்பது பாசுரங்களையும் இவ்வண்ணமாகவே இன்சுவை மிக விவரித்தருள வேணுமென்று–இப்போது இதை ஸேவித்த பல ரஸிகர்களும் ப்ரார்த்தித்தே தீருவர்கள். முந்துறமுன்னம் பிரார்த்திப்பவன் அடியேன். இந்த உத்கண்டையை ஸ்ரீஸ்வாமிஸன்னிதிக்கு விஜ்ஞாபநபத்ரிகை மூலமாகவும் நிவேதநம்செய்திருக்கிறேன்.

# மற்றொரு கட்டுரையின் விமர்சம்

கீழ் (பன்னிரண்டு வரிகளுக்குக் கீழே) சிலருடைய கட்டுரைகளில் குற்றங்குறைகள் கண்டால் அவற்றை உபேக்ஷித்து விடுவதுமுண்டு;உலகுக்கு உண்மை தெரிவதற்காக எடுத்துக்காட்டி உபகரிப்பது முண்டு-என்று எழுதியிருக்கிறேன். அந்த உபகாரத்தையும் ப்ரக்ருத ந்ருஸிம்ஹ ப்ரியாவிலேயே நிரூபித்துக் காட்டுகிறேன். முக்கூர் வித்வான் ஸ்வாமியொருவர் இந்தத் தைமாத ப்ரியாவிலேயே "நாம் பெரியோமல்லோம்" என மகுடமிட்டு ஒருகட்டுரை யெழுதி வெளியிடுவித்துள்ளார். *நாம் பெரியோமல்லோமென்கிற இந்தமகுடம் இவருடைய சொந்தவார்த்தையா? மேற்கோளான வார்த்தையா? என்பது முதல்விமர்சம்; ஸொந்தவார்த்தையாயிருந்தால் அதற்கு–"–" இப்படி கொடேஷன் மார்க்கு-அநுவாத சிஹ்ன மிடவேண்டியதில்லை. அஃது இட்டிருப்பதால் பரகீயவார்த்தை யென்பது திடமாயிற்று. தேசிகனருளிச் செய்த முநிவாஹந போகத்தில்–"காண்பனவு முரைப்பனவும் மற்றொன்றின்றி... நாண்பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்றொருபாசுரமுள்ளது. இதில் (நாண்) என்பது உண்மையான சொல்வடிவ மென்பதைத் தெரிந்து கொள்ளாதார் (சிலரோ பலரோ) (நாம் பெரியோமல்லோம்) என்றே சொல்லி வருவதுண்டு. சிலபுத்தகங்களில் அங்ஙனே பதிப்பு முள்ளது. இப்பாசுரம் ணகரவெதுகையில் தொடங்கப் பட்டதாதலால் (நாண்பெரியோமல்லோம்) என்று தானிருக்க வேண்டு மென்பதை ப்ராஜ்ஞர்கள் மறுக்கமாட்டார்கள். [காண்பனவும்—பாண்பெருமாள்—வேண்பெரிய—நாண்பெரியோம்] என்பன நான்கடிகளினுடையவும் முதற்சீர்கள். ஒவ்வொன்றும் கூவிளங்காய்ச்சீர்—என்பது இங்குத் தெரிவிக்கவேண்டியதன்று. இக்கட்டுரைகாரர்

(யாதம் அந்தா: கூபே பதந்தி) என்கிற கதையில்சேர்ந்தவர் போலும். அச்சுத்தவருக விழுந்திட்டதென்றால் "...பெரியோமல்லோம் நாம்" என்னுமளவும் மகுடமிட்டிருக்க வேண்டும். இதுவொருமருள். மேலே மற்றுஞ் சிலபல மருள்களை யெடுத்துக்காட்டு வதற்குமுன் பாஷாமருமங்கள் சிலவற்றை விவேகிகளுக்கு உணர்த்துகிறேனிங்கு.

ஸ்ரீவைஷ்ணவர்களெழுதும் தமிழ் வியாஸங்கள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத சப்தங்கள் கலந்த (மணிப்ரவாள) நடையிலேயே அமையும். வசன நடையில் அமை யுங் கட்டுரைகளில் ஸம்ஸ்க்ருதபதங்கள் பெரும்பாலும் கலசியேவரும். ஸம்யுக்தா க்ஷரங்களை யெழுதநேரும்போது பலர்க்குப் பலவகையான மருள்களைக் கண்டுவரு கிறோம். நன்னூலில் "இணைந்தியல்காலை யரலக்கிகர(ம்)ம்" என்று தொடங்கும் சூத்திரம் [வாக்யம்—வக்ரம்—சுக்லம் முதலான பதங்களிலுள்ள ஸம்யுக்தாக்ஷரங்கள் தமிழில் எவ்விதமாகத் திரியுமென்பதைத் தெரிவிப்பதாலும் இது செய்யுள்களில் பிரயோகிக்கவேண்டிய முறையைத் தெரிவிக்கவந்ததேயொழிய வசன நடையில் எழுத வேண்டிய முறையை யுணர்த்தவந்ததன்று. வசன நடையிலான நூல்களோ கட்டுரை களோ அச்சிடப்பெறும் அச்சுக்கூடங்களில் கிரந்தலிபியோ தேவநாகரலிபியோ இருக்குமானால் அந்த லிபிகளில் வடசொற்களை எளிதாகப் பதிப்பித்துவிடலாம். அங் ஙனம் பதிப்பிக்கப்பட்டுவருவதைப் பெரும்பாலும் பார்த்துவருகிறோம்.

இருபது முப்பதாண்டுகட்கு முன்பு ப்ரஸித்த வித்வானுயெழுந்தருளியிருந்த திருவயிந்திரபுரம் சேட்லூர் நரசிம்மாசாரியர் ஸ்வாமி, தம்முடைய திருநாமத்தில் ஸம்யுக்தாக்ஷரமேதுமில்லாமலிருக்கச் செய்தேயும், நரஸிம்ஹாசாரியார் என்றெழுத வேண்டியதை நரஸிஹ்மாசாரியர் என்றேயெழுதிவந்தார். தமிழில்மட்டுமன்று; இதர லிபிகளிலும் ஹகாரோத்தரமகாரமாகவே (ஸம்யுக்தாக்ஷரமாகவே) எழுதியும் அச்சிடு வித்தும்வந்தார். 'அது தவறு' என்று நாம் பன்முறையும் தெரிவித்தும் தம்முடைய பிடிவாதத்தை நெடுங்காலம் விடாமலேயிருந்துவந்தார். இது மட்டுமன்று (ப்ரஹ்ம) என்றெழுதவேண்டுமிடங்களிலெல்லாம் (ப்ரும்மம்–ப்ரும்ஹம்) என்றேயெழுதிவந்தார். அவருடைய பதிப்பு நூல்கள் இற்றைக்குமுள்ளனவே. லௌகிக வைதிகங்களில் ப்ரக்க்யாதராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. வி.வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி யைக் கொண்டு அவருடைய பிடிவாதத்தைப் போக்கினது புஸ்தகாரூடமாகவே யுள்ளது. உபப்ர்ம்ஹணம், கரிப்ர்ம்ஹிதம், இத்யாதி பதங்களிலுள்ள பவர்க்கத்ர்தீயா க்ஷரத்தைப் பலர் ஸம்யுக்தாக்ஷரமாகவே மருண்டிருக்கிறார்கள்.

இங்கொன்று தெரிவிக்கவேண்டியதாகிறது; செய்து என்னும் பொருளில் *க்ர்த்வா* என்கிற பதமும், கேட்டு என்னும் பொருளில் *ச்ருத்வா* என்கிற பதமும் (வட மொழியில்) உள்ளன. முந்தினபதத்தில் முதலெழுத்து ஸம்யுக்தாக்ஷரமன்று; பிந்தினபதத்தில் முதலெழுத்து ஸம்யுக்தம். இந்தவாசி தெரியும்படி யெழுதவேண்டு மானால் அச்சிடவேண்டுமானாலும் [கர்த்வா—ச்ருத்வா] என்றேயாகவேணும். ஆனால் இரண்டிடத்திலும் (ரு) என்பதே பல பெரியார்களின் பதிப்புகளிலும் காண்கிறது. *ச்ருதிஸ்ம்ருதி* என்னும்போது முந்தினபதத்தில் ரேபஸம்யோகமுண்டு; பிந்தின பதத்தில் அது கிடையாது. ஆயினும் (தமிழில்) எழுதுவதிலும் அச்சிடுவதிலும் வாசி யில்லாமல்தானிருக்கிறது. ஸ்ரீமதுபயவே. (புத்தூர்) ஸ்ரீவைஷ்ணவஸுதர்சந பத்ராதிப

ஸ்வாமிக்கு அச்சுக்கூடம் ஸ்வகீயமாயிருப்பதால் அக்ஷரஸந்நிவேசத்திலேயே உச்சரிக்கவேண்டிய ரீதிக்கு அநுகுணமாக அடையாளங்கள் அந்த ஸ்வாமி செய்து வைத்திருக்கிறார். அவருடைய பதிப்புகளைவிட்டு மற்றைப் பதிப்புகளை நோக்குங்கால் சில விபர்யாஸங்கள் தவிர்க்க முடியாமலேயிருக்கின்றன. ப்ரக்ருதம் நம்முடைய விவக்ஷிதம் கேளீர். ஸம்யுக்தாக்ஷரமென்று எதை நாம் வழங்குகிறோம்? ஹல்லோடு ஹல்சேர்ந்தால் அங்குத்தான் ஸம்யுக்தாக்ஷரவ்யவஹாரம். ஒரு ஹல்லோடு இரண்டு மூன்று ஹல்லுகளும் சேருவதுண்டு. வக்த்ரீ வேதாந் (ஹயக்ரீவஸ்தோத்ரே) என்ற விடத்தில் க்த்ரீ என்பதில் ககார தகார ரேபங்கள் ஆகிய மூன்று ஹல்லுக்கள் ஸம்யுக்தங்களாயிருக்கின்றன. அதன் பக்கத்தில் அஸ்தி என்றோ ஆஸ்தே என்றோ ப்ரயோகிக்கப்பட்டால் ஸந்திவசாத் யகாரமாகிற நான்காவது ஹல்லும் கூடி [க்த்ர்ய] என்றாகும்.

தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டத்தில் ஆறுவது (ஸமிதோ யஜதி) ப்ரச்நத்தில் ஒரு பஞ்சாசத்தின் தொடக்கத்தில் (ஸ்த்ரீ அஸ்ய) என்றுள்ளது; க்ரமம் ஓதும்போது [ஸ்த்ர்யஸ்ய] என்றோதவேண்டுகையாலே ஸகார தகார ரேப யகாரங்களாக நான்கு ஹல்லுக்களின் ஸம்யோகம் தேறுகின்றது. [ஸ்த்ரீ] என்கிற பதத்தின் முன்பதம் [த்] என்று முடிந்திருப்பதனால் அந்த ஹல்லுங்கூடி ஐந்து ஹல்லுக்களும் ஓர் அச்சுங்கூடின ஓரெழுத்து தேறுகின்றது. வேதத்திற்போல லோகத்திலும் இங்ஙனே தேறுவது அஸம்பாவிதமன்று. அதைத் தமிழில் எழுதவேணுமானால் அக்ஷரங்களின் பௌர்வாபர்யத்தில் விப்லவம் பண்ணலாகாது. அக்ஷரங்கள் ச்ரவிக்கிற முறையிலேதான் எழுதவேண்டும். ஸம்ஸ்க்ருதத்தில், ஆஹ்நிகம், மாத்யாஹ்நிகம், மத்யாஹ்நம், வஹ்நி, ஜாஹ்நவீ......என்றுள்ள சில பதங்களைக்கொள்வோம். (ஹ்நி, ஹ்ந) என்பதை இந்த முறையிலெழுதுவது பொருத்தமேயொழிய (ஆந்ஹிகம்) (வந்ஹி), என்றெழுதுவது ஒருகாலும் பொருந்தாது. அப்படியெழுதினால் ப்ராஹ்மணனை ப்ராம்ஹணனென்றும் ப்ரஹ்மத்தைப்ரம்ஹமென்றுமெழுதுவதுபோலவேயாம்.

(ஸம்யத்) என்றொருபதத்தை யெடுத்துக் கொள்வோம். இது வேதத்தில் ஓதப்படும்போது (ம்) என்பது அநுஸ்வாரமாக ஓரிடத்திலும், அடுத்துள்ள யகாரத்தோடு சேர்ந்து ஸம்யுக்தாக்ஷரமாக வோரிடத்திலும் ஓதப்படுகிறது. அநுஸ்வாரமாக வருமிடத்தில் [ஸம்யதிதி ஸம்—யத்] என்று அவக்ரஹ (வேஷ்டந) பாடமுண்டு. ஸம்யுக்தாக்ஷரமாக வருமிடத்தில் அவக்ரஹ பாடம்கிடையாது. இந்த வாசிக்குத் தகுந்தபடி உச்சாரணபேதமும் உள்ளது. பதமோதாதவர்களுக்குப் பெரும்பாலும் இந்தவாசி தெரியாதாகையால் இரண்டிடத்திலும் துல்யமாகவே உச்சரிப்பர்களவர்கள். அக்ஷரங்களின் ஆநுபூர்விக்கு எங்கும் விப்லவம் ஸம்பவியாது. "நாம் பெரியோமல்லோம்" என்று மகுடமிட்ட கட்டுரையெழுதுபவர் ஜஹ்நு மஹர்ஷியை இருபது முப்பது தடவை ப்ரஸ்தாவித்துள்ளார். அத்தனையிடங்களிலும் ஜந்ஹு—ஜந்ஹு என்றேதான். ஜகாரோத்தர ஸம்யுக்தாக்ஷரத்தில் முன்னம் ச்ரவிக்கிற அக்ஷரம் ஹகாரமேயொழிய நகாரமன்று என்பதை அந்தோ! அறிந்திலர். இது மிகச் சிறிய விஷயந்தானே; இதற்கு இத்தனை விரிவு வேண்டுமோ? என்று சிலர் நினைக்கலாம். மருளில் சிறிது பெரிதென்றுண்டோ? ப்ரஹ்மத்தை ப்ருஹ்மம் என்பதும் ப்ரும்ஹம் என்பதுங்கூட சிறிய விஷயந்தான்.

மற்றொன்று கேண்மின். தமிழில் உடுத்து, உடுத்தி என்றிரண்டு பதங்க ளுள்ளன. *உடுத்துக்களைந்த* என்றார் பெரியாழ்வார். *மந்திரக்கோடி யுடுத்தி* என்றாளாண்டாள். தான் அணிந்துகொண்டால் அங்கு உடுத்து என்பது. பிறர்க்கு அணிவித்தால் அங்கு உடுத்திஎன்பது-என்கிற வாசியை யறியாமலும், *செய்யநூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் *காறைபூணும்......கூறையுடுக்கும்* *பட்டுடுக்கு மயர்த்திரங்கும்* இங்ஙனேயுள்ள பாசுரங்களை யறியாமலும் விபரீத பிரயோகங்கள் செய்துள்ளார் "பெண்கள் தாங்கள் இடுப்பில் புடைவை உடுத்தும் போது" என்றெழுதுமிவரை 'யாருடைய இடுப்பில்' என்று வினவாமலிருக்க முடியுமா? இனி; மேல்வரும் வம்புவிஷயங்களை நோக்குமின்.

"அவர் செருக்குக்கொள்ளவில்லை. இவர் செருக்குக்கொள்ளவில்லை" என்று தலைகாலில்லாமல் தலைவேதனையாக ஏதோ எழுதிப் போருகிறார். நம்மாழ்வார் பெரியதிருவந்தாதியில் எம்பெருமானை நோக்கி 'நான் பரப்ரஹ்மமேயொழிய நீ பரப்ரஹ்மமல்லை' என்று ஸ்பஷ்டமாக—ஸுஸ்பஷ்டமாக மறுக்கிறார். *புவியு மிருவிசும்பும் நின்னகத்த, நீ யென்செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய்—அவி வின்றி, யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்? ஊன்பருகு நேமியாய்! உள்ளு* என்பது பாசுரம். (பொருள்.) உபயவிபூதியும் உன்னுள்ளே கிடக்கின்றன; இப்படிப்பட்ட நீ எனது செவி வழியாகப் புகுந்து நிரந்தரமாக என்னுள்ளே ஒடுங்கிக் கிடக்கின்றாய்; இப்படியானபின்பு, விபூதியை யுடைய நீயோ விபூதிமானையுடைய நானோ. பெரியாராரென்றறிவாரார்? என்று செருக்கிப் பேசுகிறார். *எனக்கார்நிகர் நீணிலத்தே? ¤எனக்கினி யாவர் நிகரகல்வானத்தே¤ குடமாடியை வானக்கோனைக் கவிசொல்லவல்லேற்கு இனி மாறுண்டே? என்று இங்ஙனே பலபல பாசுரங்கள். மற்றோராழ்வார் „எனக்காவார் ஆரொருவரே? எம்பெருமான் தனக்காவான் தானே மற்றல்லால்—என்மதிக்கு விண்ணெல்லாமுண்டோ ஈவிலை?¤ என்கிறார். „இல்லையெனக்கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக்கெதிரே¤என்று செருக்கின்எல்லையினின்று பேசுகிறாரெம்பார். *எனக்காரும் நிகரில்லையே* என்கிறார் அமுதனார். ¤மத்த: ப்ரதியவர: கச்சித் நாஸ்தி ஸுக்ரீவ ஸந்நிதௌ¤ என்னுமவர் தாமே *பந்தகாசநமாகாசே பதந்தம் பக்ஷிஸேவிதே, வைநதேயமஹம் ஶக்த: பரிகந்தும் ஸஹஸ்ரஶ: என்றும் செருக்கிப் பேசுகிறார். ¤மீமாம்ஸா சாஸ்த்ரயுக்மச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் மாத்ருஶோந்ய:* எனகிறார் பரமாசார்யர்.

* அநாராத்ய காளீம் அநாஸ்வாத்ய கௌளீம் விநா மந்த்ர தந்த்ரை; ருதே சப்த சௌர்யாத், ப்ரபஞ்சப்ரஸித்த ப்ரபந்தப்ரவக்தா விரிஞ்சப்ரபஞ்சே மதந்ய: கவி: க:?* என்று அவலேபஸீமாபூமியில் நின்று பேசுகிறார் ஸ்ரீமத் கடிகசதம் அம்மாள் இங்ஙனே காட்டப் பதினுயிரமுண்டு. இவற்றையெல்லா மெடுத்து இன்சுவைமிக அநுபவிக்க வல்லமையற்றவர்கள் அர்த்தமில் லாதபடி எதையோ எழுதி வெள்ளைக்காகிதங்களைக் கறுப்பாக்கிக்கொண்டிருக் கவே ப்ராப்தம் *தோன்றுதோற்றித் துறைபல முடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே* என்ற நன்னூலாசிரியர் தாமே ¤மன்னுடைமன்றத்து ஓலைத்தூக் கினும், தன்னுடையாற்றலுணராரிடையினும் மன்னிய அவையிடை வெல்லுறு

பொழுதினும், தன்னை மறுதலை பழித்தகாலையும், தன்னைப் புகழ்தலும் தகும் புலவோர்க்கே * என்றும் உடனே கூறிவைத்தார்

கண்ணபிரான் ஏழு பிராயத்தில் அட்டுக்குவி சோற்றுப்பருப்பதத்தை யெல்லாம் ஒரு கபளமாக வுண்டு, மழைவந்தெழுநாள் பெய்தபோது, கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமழியாமே வாடாமே வடிவேறு திருவுகிரும் நோவாமே செந்தாமரைக் கைவிரலைந்தினையுங் கப்பாக மடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக் கொடுத்து மலையைக் குடையாக்கி ஏழுநாள் ஒருபடிப்பட நின்றநிலைக்கு கருவப்பட வில்லை; *சதுர்தஶஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி?* என்று விண்ணவரெல்லாம் அஞ்சி நடுங்காநிற்க, *அஸஹாயசூர! அநபாயஸாஹஸ!* என்னும்படி அத்தனை சேனை வெள்ளத்தையும் ஒரு நொடிப்பொழுதில் தொலைத்த சக்ரவர்த்தி திருமகனுர் கருவப்படவில்லை—என்று ஒருவர் சொல்லத் தொடங்கினபோது, மற்றொருவர் *பிஶாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!* என்று அப்பெருமான்தானே கூறினதுசெருக்குமொழியன்றோ? என்கிருர் (மற்றொருவர்.)

*யோஷித்பூதத்ருஷந்தி அபோடஶகடஸ்தேமாநி வைமாநிகஸ்ரோதஸ்விந்யுபலம்பநாநி பலிதோதஞ்சத் பரிக்ஷிந்தி ச, தூத்யாதிஷ்வபி துர்வசாநி பதயோ: க்ருத்யாநி* (பாதுகாஸஹஸ்ரே) என்றபடி அரியபெரிய பலப்பல காரியங்கள் செய்த திருவடிகள் கருவங்கொள்ளவில்லை. இந்த அநியாயத்தைக் கேளுங்கள்; பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருத்துடைகளை வருணிக்கும் சுலோகத்தில் *ரம்பாகரபகரீந்த்ரகராபிரூப்யதர்ப்பம் பரிபூய கர்வகுர்வோ: ரங்ககுஞ்ஜரோர்வோ:* என்றருளிச்செய்கிருர்; மதுகைடபர்கள்—யாரும் சாவாதவிடத்தில் தங்களுக்குச் சாவு நேரவேணுமென்று வரங்கேட்டுக்கொண்டிருந்தபடியால் எம்பெருமான் அவர்களைத் தனது திருத்துடைகளினிடையில் இறுக்கிக் கொன்றிட்டாரென்பது புராண வரலாறு. இதை பட்டரும் (மேலே காட்டிய சுலோகத்தின் தொடக்கத்திலேயே கூறியுள்ளார், கூரத்தாழ்வானும் திருமாலிருஞ்சோலை யழகருடைய திருத்துடைகளை வருணிக்குமிடத்து (ஸுந்தரபாஹுஸ்தவே) *பிஷ்டதுஷ்ட மதுகைடபகீடௌ-ஸுந்தரஸ்ய ஸதூரு* என்றருளிச்செய்துள்ளார் எம்பெருமானுடைய திருவடிகள் செய்த காரியங்கள் எவ்வளவு மேன்மை பெற்றவை' அத்தகைய திருவடிகள் கருவங்கொள்ளாமலிருக்க அற்பமான வொரு காரியஞ்செய்த திருத்துடைகள் கருவங்கொள்வது நியாயமா? இதைப்பற்றி அவசியம் விசாரணை நடத்தியேயாகவேண்டும். இரண்டு வகையில் விசாரணையாகவேணும். (1) ஸ்ரீரங்கநாதனுடைய திருத்துடைகளை நோக்கி "மிகச்சிறுகாரியஞ்செய்த நீங்கள் எப்படி கருவப்படலாம்? இது தகுதியன்றே; விடை கூறுங்கள்—என்று இவர்போய்க் கேட்கவேண்டும். (நாங்கள் கருவப்படவில்லையே யென்று அத்திருத்துடைகள் விடை கூறினுல்) (2) பட்டரை நோக்கி "ஸ்வாமிந்! ரங்ககுஞ்ஜர—ஊருக்கள் கருவப்படாமலிருக்க, கருவப்பட்டதாய் தேவரீர் பொய்யாக எழுதிவைக்கலாமா? தேவரீருடைய திருத்தகப்பனுர் கதையைச் சொல்லி வைத்தாரே யல்லது, அழகருடைய துடைகள் கருவப்பட்டதாகச் சொல்லவில்லையே; அப்படியிருக்க, தேவரீர் இல்லாததை ஏறிட்டுரைத்தது தகுதியா? என்று கேட்கவேணும். இந்த வ்யவஹாரத்தை லேசாக விடக்கூடாது. யார்யார் கருவப்படலாம்? யார் கருவப்படக்கூடாது என்பது தேறியேயாகவேணும்.

ஒருகவி ஹாலாஹலத்தைநோக்கிச் சொல்லுகிறர்—"அஹமேவ குருஸ் ஸுதா ருணாமிதி ஹாலாஹல! மாஸ்ம தாத! த்ருப்ய:" (குவலயாநந்தே) என்று;—இதனுல் ஹாலாஹலம் கருவப்பட்டதாக நன்கு விளங்குகின்றது. அந்த விஷத்தையுங்கண்டு இவர் கேட்கவேணும்—எப்படி நீ கருவப்படலாம்? என்று. ......இப்படி எத்தனையோ விசாரணைகள்செய்யவேண்டிய ஆவச்யகதை ஏற்பட்டுவிட்டது. இந்தத்தலைவேதனை விஷயத்தையும்விட்டு மேலே போவோம்.

'இங்கே சொன்னது ஓர் உதாரணத்திற்காக' என்கிறரிவர். இத்தகைய லேகனம் வேறு எங்கேனும் கண்டதுண்டோ? சிலர்'அபசாரமாயிற்றே'என்று சொல்லவறியாமல் "அபசாரத்துக்கு ஹேதுவாச்சுதே"என்றுசொல்வதுவழக்கம். ஒருபெரியவர் இருளிலே எழுந்தருளாநின்றர்; அவரெதிரே செல்லாநின்றவொருவர் அவரையறியாமல் மண்டையோடு மண்டை யிடித்துக் கொள்ளும்படி யாயிற்று. அந்தப்பெரிய ஸ்வாமி இடிபட்ட நோவு பொறுக்க மாட்டாமல் அலறினர். திருமிடற்றோசையினல் அவரை இன்னரென் றறிந்து கொண்டவிவர் 'ஐயோ! அபசாரத்துக்கு ஹேதுவாச்சுதே!' என்றர். அது கேட்ட அந்தப் பெரியவர் மஹாமதியாகையாலே (மண்டையிடி நோவு ஒருபுறமிருக்கச் செய்தேயும்) இவருடைய அசட்டுவார்த்தையை ஸஹிக்கமாட்டாமல் "அப்பா! அபசாரத்துக்கு ஹேதுவே இப்பாடு படுத்தினல் பின்னை அபசாரமே உண்டாய் விட்டால் அது என்னபாடு படுத்துமோ?" என்றர். விசேஷஜ்ஞரல்லது மற்றையோர் புரிந்து கொள்ள மாட்டாத இவ்வார்த்தையின் இனிமையை அந்த யதாஜாதர் என்ன அறியப் போகிறர். இவ்வெழுத்தாளர் 'ஸ்தாலீ புலாகமாக (அல்லது) உபலக்ஷணமென, என் றெழுதியிருக்கலாம். அவலக்ஷணமாகவன்றோ எழுதியுள்ளார். ப்ராஹ்மணார்த்தம் என்பதுபோலே உதாஹரணார்த்தம் என்னக் கூடாதோ? என்பர். ஏன் கூடாது? எல்லாங்கூடும்.

**கர்வம்** என்பது வடசொல். இதற்கு நேரான தமிழ்ச்சொல் செருக்கு என்பது. இந்தச் செருக்கு ஹேயமாயினும் ஸர்வாத்மநா ஹேயமன்று. ஸ்வாமி தேசிகனும் ரஹஸ்யக்ரந்தத்தில் கொண்டாடப்பட்ட முராரி மஹாகவி "தேவீம் வாசமுபாஸதே ஹி பஹவஸ் ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராமஸௌ குருகுலக்லிஷ்டோ முராரி: கவி:" என்று தானே பேசிக் கொண்டார். இது பிறருடைய உக்திபோல் தோன்ற நின்றலும் *ராமோ த்விர் நாபிபாஷதே* என்றது போல ஸ்வகீயோக்தியே யாகும். இது கர்விஷ்டனுடையசொல் என்று இதை யாரும் வெறுப்பதில்லை. தள்ளுவதில்லை; "விம்சத்யப்தே விச்ருத நாநாவித வித்ய: த்ரிம்சத்வாரம் ச்ராவிதசாரீரக பாஷ்ய:" "தர்க்கபாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோம்" என்கிற தேசிகதிவ்ய ஸூக்திகளோடொப்ப உலகமெல்லாம் சிரமேற் கொள்ளவே காணநின் றோம். "வயம் வா வயமேவ வா" என்றதையுங் காணநின்றோம். அவரவர்கள் தந்த மக்கு உண்மையாகவுள்ள பெருமையை உண்மையாக வெளியிட்டுக் கொண்டால் அது ஒருகாலும் செருக்கு மொழியாகாது. ஸ்வாமி யதிராஜ ஸப்ததியில் *சுத்தாதேச வசம்வதீ...லலிதோந்மேஷா மநீஷா மம* என்றும், அடுத்தபடி *கோ வா சக்ஷுரு தஞ்சயேதபி புர: ஸாடோப தர்க்கச் சடா சஸ்த்ரசஸ்த்ரிவிஹார ஸம்ப்ருதரண ஸ்வாதேஷு வாதேஷு ந:* என்றும் கம்பீர மதுரமாக ஸாதித்துள்ளவற்றை நிச்சலும் கோஷித்து மகிழ்வோமாக. மகிழ்ந்துகொண்டே யிருக்கிறோம். ... ... *

# உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமுது

ஸ்ரீமதுபயவே (Gwaliar) ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமி.

திருவஷ்டாக்ஷரத்தின் பரமதாத்பர்யமாயும், ஆழ்வார் களுடைய திவ்யப்ரபந்தத்தின் ஸாரார்த்தமாயும், ஸ்ரீ மதுரகவிகளுடைய உக்தியாலும் அநுஷ்டானத்தாலும் ப்ரகாசிதமாயுமுள்ளது சரம பர்வநிஷ்டை; அதாவது சரமோபாயம் ஸதாசார்யாபிமானமே என்று விச்வஸித்திருப்பது. பகவத்கைங்கர்யம் ப்ரதமாவதியாய் பாகவதகைங்கர்யமே சரமாவதியாயிருக்கும். தன்னையங்கீகரித்து தத்வஜ்ஞானத்தை யுண்டாக்கிய மஹோபகாரகனை ஸ்வாசாரியனுக்குசேஷமாயிருக்கை ஸமஸ்தபாகவதருடைய உகப்பாயும் தன் ஸ்வரூபத்தினுடைய எல்லை நிலமாயு மிருக்கும். சேதனர்களனைவர்க்கும் இன்றியமையாத; ஸ்வரூப உபாய, புருஷார்த்தங்களின் நிஷ்க்ருஷ்ட வேஷமாயும் பரமரஹஸ்யார்த்தமாயுமிருக்கு மித்தகைய சரம மருவ நிஷ்டையிருக்கும் படியைத்திருவரங்கத்தமுதனுர்க்கு எம்பெருமானுர் தமது நிர்ஹேதுக க்ருபையினுலே கூரத்தாழ்வான் திருவடிகளிலே இவரை ஆச்ரயிப்பித்தருளி அவர் மூலமாக உபதேசித்தருளினுர் அங்கனம் உபதேச ப்ராப்தமான அந்தச்சீரிய பொருளை இவ்வமுதனுர் தாம் அநவரத பாவனை பண்ணிப்போந்தார். இவ்வமுதனுரின் அமுதவாக்காகிய செஞ்சொல் கலித்துறையந்தாதிக்கு வேதப்பிரான் பட்டர் ஸாதித்தருளிய தனியனில் "உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமுது, ஓங்கும் அன்பால் இயம்பும் கலிந்துறை யந்தாதி ஓத இசை" என்று தம்முடைய திருவுள்ளத்தை நியமிக்கிருர். இதில் உயர்ந்த குணமென்பது என்ன வென்பது இந்தவ்யாஸத்தில் விசேஷித்து அநுபவிக்கப் படுகின்றது. மேலும் மேல்கோட்டை திருநாராயணபுர ப்ராந்த்யத்தில் அநுஸந்திக்கப்படுகின்ற ஸோமயாசியாண்டானருளிச் செய்த தனியனின் ஈற்றடியில் "புனிதன் திருவரங்கத்தமுதாகிய புண்ணியனே" என்றியம்பப்பட்டுள்ளது. இதில், இராமாநுசன் மிக்க புண்ணியன், என்னுமாபோலே மிக்க புண்ணியனடியாக வந்த புண்ணியம் என்பதையும். எம்பெருமானுருக்கு ஸமகாலத்தவராய் திருவரங்கம் பெரிய கோயிலில் மிகவும் ராஜஸராய், செருக்குடன் வாழ்ந்துவந்த பெரியகோயில் நம்பி, பரமோதாரரான எம்பெருமானுரின் விசேஷ கடாக்ஷத்திற்குப் பாத்ரபூதராகி அன்னுரால் 'அமுதன்' என்கிறதிருநாமத்தைப் பெற்ற வ்ருத்தாந்தத்தையுங் காட்டுகின்றது. இந்த வ்ருத்தாந்தத்தை ஈண்டு சிறிது விவரிப்போம்.

2. பெரியகோயில் நம்பி எம்பெருமானுருடைய நியமனம் பெற்று ஒரு பிரபந்தம் இட்டருளுவதாக அடையவளைந்தான் திருமதிலுக்கு இவ்வருசேயிருந்த ஒரு தென்னஞ்சோலைத்திருமண்டபத்தில்வீற்றிருந்து பட்டோலைகொண்டிருந்தார். அவ்வளவில் எம்பெருமானுர் அழகியமணவாளனது நியமனத்தினுல் ஆழ்வான், ஆண்டான், எம்பார் முதலிய அந்தரங்க சிஷ்யர்களோடு அவ்விடத்தே யெழுந்தருள, அப்பொழுது செழுந்திரைப்பாற் கடல், என்ற நூற்றைந்தாம் பாசுரம் தலைக்கட்டி, 'இருப்பிடம் வைகுந்தம்' என்றபாசுரம் எழுதவேண்டிய தருணமாயிருந்தது. அதுமுதலான மூன்று பாசுரங்களும் எம்பெருமானுர் திருமுன்பே தொடுக்கப்பட்டு, பின்னர் அரங் கேற்றியானபின் இந்த விசேஷத்துக்கு ஸ்மாரகமாக இப்பிரபந்தத்திற்கு மட்டும் சாற்றுப் பாட்டுக்கள் மூன்ருயிருக்க வேண்டு மென்று ஆழ்வான் நியமித்தருளியதால் மற்றைப்

பிரபந்தங்களுக்கு இரண்டு பாசுரங்கள் சாற்றுயிருப்பது போலல்லாமல் இதற்கு மூன்று பாசுரங்கள் சாற்றுக ஸம்பிரதாயம் திகழ்கின்றது. மேலும், சக்ரவர்த்திதிருமகன், தன் சரிதையை குசலவர்கள் வாயிலாகக்கேட்டு ரஸித்தாற்போல் எம்பெருமானாரும் இந்தப் பிரபந்தத்தை மற்றை முதலிகளோடு திருச்செவி சாத்தித் தலை குலுக்கிப் போர உகந்தருளி, தம் திருவடிகளில் ஸம்பந்த முடையார்க் கெல்லாம் இந்தப்ரபந்தத்தை அன்று தொடங்கி நித்யாநுஸந்தானமாம்படி கற்பித்தருளியதுந் தவிர இப்பிரபந்த கர்த்தாவின் வாக்கு அமுதவாக்காயிருந்தமையால் அவருக்கு 'அமுதன்' என்கிற திருநாமத்தையும் பிரஸாதித்தருளி மிகவும் கடாக்ஷித்தருளினர். ஆகையால் அதுமுதல் பெரிய கோயில் நம்பி என்ற திருநாமம் மாறித்திருவரங்கத்தமுதனர் என்ற திருநாமம் வழங்கத்தொடகிற்று.

3. திருவாய்மொழி 'உலகமுண்ட பெருவாயா' பதிகத்தில் பத்தாவது பாசுரத்தில் 'நிகரில் புகழாய்!' என்பதற்கு தாமரையாள் சிதகுரைக்கிலும் 'என்னடியார் அது செய்யார்' என்னும்படி குணுதிக்யமான வாத்ஸல்யத்தை எடுத்துக்காட்டப்பட்டுள்ளதல்லவா? அதுபோல், இவ்விடத்தில் வேதப்பிரான் பட்டரால் சிலாகிக் கப்பட்ட இவ்வமுதனரின் உயர்ந்தகுணந்தானென்ன? பகவத்பாகவத பக்தி முதலிய மஹாகுணங்கள் நிறைந்தவரென்று பொதுவாக உரைப்பினும் இங்கே விசேஷித்து அநுபவிக்க வேண்டியது எம்பெருமானரின் அந்தரங்க பக்தர்களின் திருவடிகளில் அமுதனருக்கு உண்டான ப்ரேமாதிசயமே. இதனைப்பலபடியாக அநுபவிப்போமிங்கு. வேதப்பிரான் பட்டர், தாம் அருளிச்செய்த முதல் தனியனிலேயே சரமபர்வத்திலிழிகின்றர். மூங்கிற்குடியென்னும் மஹாகுலத்திலவதரித்த திருவரங்கத்தமுதனரின் திருவடித்தாமரைகளை சிரோபூஷணமாக அணிந்து கொண்ட தம்மை யமனவது யமபடர்களாவது அணுகுவதற்கு யாதொரு ப்ரஸக்தியுமில்லை யென்று அறுதியிடுகிருர். ஆகவே அடுத்த தனியனில் ப்ரஸ்தாவித்துள்ள 'உயர்ந்தகுணமும்', 'ஓங்குமன்பும்' சிறந்தகுணசாலியாகிய அமுதனர் இராமாநுசன்பால் பரமபக்தி தலையெடுத்து அருளின பிரபந்தமென்று மட்டுமல்லாமல், 'நெடுமாற் கடிமை' அநுபவத்திலும் கால்சாய்க்கும் இனி இப்பிரபந்தத்தை நோக்குங்கால் எம்பெருமானரிடமும் அவரடியார்களிடமும் அமுதனுக்குண்டான பிரேமாதிசயம் பெருக்காருய்த்திகழ் கின்றது. எம்பெருமானுக்கும் எம்பெருமானருக்கும் உள்ள வாசியைப் பலபடியாக எடுத்துக்காட்டி, எம்பெருமானரிடம் தமக்குள்ள பிரேமையை.

"என்னெஞ்சில் பொருத்தப்படாது மற்ருேர் பொய்ப்பொருளே" என்றும்

"அவன் சீரன்றியானென்றும் உள்மகிழ்ந்தே" யென்றும்

"கையில் கனியென்னக் கண்ணனைக் காட்டித் தரிலும் உன்
மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்" என்று பரவசராயும்,

அல்லாதார் "வேறுதெய்வம் இங்கு யாதென்றுலர்ந்து
நல்லறிவிழந்து அவமே ஐயப்படா நிற்பர்!" என்று துக்கித்தும் தலைக்கட்டுகிருர்.

ஆயினும், "கண்டுகொண்டே னெம்பிராமாநுசன் றன்னைக்
காண்டலுமே தொண்டு கொண்டேன்
அவன் தொண்டர் பொற்ருளில்" என்றும்

"இராமாநுசன் அம்பொற்பாத மென்னும்கடங்
கொண்டிறைஞ்சும் திருமுனிவர்க் கன்றிக்
காதல் செய்யாத் திடங்கொண்ட ஞானியர்க்கே
அடியே னன்பு செய்வதுவே" என்றும்

"இராமாநுசனைப் பணியும் நல்லோர் சீரினில்
சென்று பணித்தது என்னுவியும் சிந்தையுமே" என்றும்

"இராமாநுசனைத் தொழும் பெரியோர் பாதமல்லால்
என்றன்னுருயிர்க்கு யாதொன்றும் பற்றில்லையே" என்றும்,

"கற்றார் பரவுமிராமாநுசனைக் கருது முள்ளம் பெற்றார்யவர்
அவரெம்மை நின்றாளும் பெரியவரே" என்றும்

"உளரெம்மிறைவர் இராமாநுசன் தன்னை யுற்றவரே" என்றும்

"இராமாநுசனைத் தொழும் பெரியோர் எழுந்திரைத்தா
டுமிடம் அடியேனுக்கிருப்பிடமே" என்றும்

இராமாநுச பக்தர்களிடம் அமுதனார் தமக்குண்டான ப்ராவண்யம் தலைமண்டை கொள்ளப் பெற்றுப் பேசுகிறார். இவ்வரு மருந்தன்ன அந்தாதி அவதரித்த விருத்தாந்தத்தை மீண்டும் நோக்குங்கால், பெரியகோயில் நம்பி எம்பெருமானார் திருமுன்பே தொகுத்த மூன்று பாசுரங்களினுடைய முதல்பாசுரம் 'இருப்பிடம் வைகுந்தம்' என்பது இதில் உபய விபூதிவிசிஷ்டனை எம்பெருமானையும் தம்முள்ளத்தி லொடுக்கிய எம்பெருமானார் அமுதனாருடைய திருவுள்ளத்தை மிக விரும்பி அதிலெழுந்தருளி யிருப்பதாக உள்ளது. இதற்கு முந்திய பாசுரத்திலோ வென்னில் ஸ்ரீராமாநுஜ பக்தர்கள் களித்துக் கூத்தாடுகின்ற இடமே தமக்கு பரமோத்தேச்யமான ஸ்தானம் என்றார் அமுதனார். ஆகவேதான் எம்பெருமானாரும் இத்தகைய சரம பர்வநிஷ்டரின் திருவுள்ளத்தை நாடியது போலும். மேலும், அடுத்த 'இன்புற்ற சீலத்து இராமாநுசா!' என்கிற பாசுரத்தில் *என்புற்ற நோயுடல் தோறும் பிறந்து எண்ணரிய துன்புற்று வீயினும் ஸர்வகாலத்திலும் ஸர்வதேசத்திலும் தேவரீருக்கு அநந்யார்ஹராயிருக்குமவர்களுக்கே மறுபாடுருவின ஸ்நேஹத்தையுடையேனா யிருக்கும்படி செய்து என்னை அவர்கள் திருவடிகளிலே அடிமையாம் படி பண்ணியருளவேண்டும். இதுவே அடியேனுக்குப் புருஷார்த்த மென்றகருத்து என்று எம்பெருமானார் திருமுன்பே விண்ணப்பித்துள்ளார். இதுதான் எம்பெருமானாருக்கு அமுதினு மினிதாய், பரமபோக்யமாக இருந்தது போலும். எங்கனே யென்னில், திருவாய் மொழி 'நெடுமாற் கடிமை' பதிகத்தில் நம்மாழ்வார் பாகவதர்களின் போக்யதையை விளாக்குலை கொள்ளலாம்படி அநுபவிக்குங்கால் எம்பெருமானும் அல்லிமலர்க் கண்ணனாய் ஆனந்த பரிவாஹரூபனாய் இருந்தபடி. அதுவுமன்றிக்கே, 'அடியார்க்கென்னை ஆட்படுத்திய விமலன்' என்று ஸ்ரீரெங்கநாதனை திருப்பாணாழ்வார் ஏத்தியது போல 'தன்னையுற்றாட் செய்யும்' என்கிற 97 வது பாசுரத்திலே இவ்வமுதனாரை எம்பெருமானார், தம்மை ஆச்ரயித்தவர்களை ஆச்ரயிக்கிற அதிகாரியாக இருக்கட்டும் என்று திருவுள்ளம் பற்றி, அங்கனமே அவரடியார்க் காட்படுத்திய பிரகாரத்தையுங் கண்டு கொள்க. ... ... *

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜர் வாக்கும் வாழ்வும்

## —ஸ்ரீபெரும்பூதூரில் கருத்தரங்கு

எம்பெருமானர் அவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் 22-1-78 ஞாயிற்றுக் கிழமை குருபுஷ்யம் முதல் உத்ஸவம் காலை 11மணிக்கு ஸ்ரீ தாயார்ஸந்நிதி மண்டபத்தில் ஸ்ரீராமாநுஜர் வாக்கும் வாழ்வும் என்றதலைப்பில் கருத்தரங்கு நடைபெற்றது. இராமாநுஜ கருணாலயம் திருவல்லிக்கேணி உடையவர் கைங்கர்ய ஸபை ஆகியவைகளின் சார்பில் நடந்த இக்கருத்தரங்குக்கு வந்திருந்த வித்வான்களையும் மற்றவர்களையும் சென்னை வைணவகல்லூரிப் பேராசிரியர் திரு K.A. மணவாளன், M.A. அவர்கள் வரவேற்றார். மேலும் கருத்தரங்குக்குத் தலைமைதாங்கி நடத்தித் தருமாறு ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீயதீந்திரப்ரவண ஸ்ரீயதிராஜ ஜீயரைக் கேட்டுக் கொண்டார்

ஸ்ரீயதிராஜ ஜீயர் தலைமையுரையில் எம்பெருமானைவிட எம்பெருமானர் பரம. காருணிகர் என்றும் அவ்வெம்பெருமானர் இயற்றிய நூல்களைப் படித்து அதன்படி நடப்பது தான் நமது கடமைஎன்றும் கூறினர். பின்பு திருக்கண்ணபுரம் ஸ்ரீ உ.வே. ராஜகோபாலய்யங்கார் ஸ்ரீராமாநுஜரைப் பற்றித் தாமியற்றிய பத்துப் பாடல்களைப் படித்து விளக்கம் கூறி எம்பெருமானர் தர்சனம் தழைக்க எல்லோரும் பாடுபடவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் பாஷ்யகார ஸ்வாமி ஸ்ரீபாஷ்யத்தின் மங்கள ச்லோகமான 'அகிலபுவன' என்ற ச்லோகத்தின் அர்த்தத்தை அழகாக உபந்நியஸித்தார். காரப்பங்காடு ஸ்ரீ.உ.வே. ரங்கராஜய்யங்கார் ஸ்ரீபாஷ்யத்தின் பெருமையை அறிந்து போற்ற வேண்டும் என்றார். பேராசிரியர். ஜகந்நாதாசாரியார் ஸ்ரீராமாநுஜர் தம்முடைய திவ்யஸூக்திகளாலே பல்வேறுமதங்களையும் கண்டித்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தைப் பரப்பின பெருமையை ஸ்ரீமணவாளமா முனிகளின் சிலபாடல்களைக் கொண்டு விளக்கினர். டாக்டர். வி.வி ராமாநுஜம் ஐயங்கார் சரம பர்வநிஷ்டை பற்றிப்பேசினர். பேரசிரியர் கே. ஏ மணவாளன் ஸ்வாமி ஸ்ரீ ராமாநுஜரின் கிருபையை விளக்கி ஸ்ரீவேதாந்த தேசிகரின் திருவாக்குகளால் எம்பெருமானரின் பெருமையைக் கூறினர். ஸ்ரீ உ.வே. குமாரவாடி ராமாநுஜாசாரியார் ஸ்ரீவைஷ்ணவத்துக்கு இராமாநுசருடைய தொண்டு என்பது பற்றி உபந்நியஸித்தார். ஸ்ரீ உ. வே. டி. ஸ்ரீநிவாஸய்யங்கார் இராமாநுஜருடைய வாழ்க்கையில் சிலநிகழ்ச்சிகளை எடுத்துக்கூறினர். முடிவில் இராமாநுஜ கருணாலயம் ஸ்ரீ கே.வி. பாஷ்யம் இந்த கருத்தரங்கை ஏற்பாடுசெய்த ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யதிலகம் ஸ்ரீ K. . ஸ்ரீநிவாசனைப் பாராட்டி எல்லோருக்கும் நன்றி கூறினர். விழா இனிது முடிந்தது. —K A. **மணவாளன்.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம: ஸ்ரீமதே பரகாலாய நம:

ஸ்ரீசெங்கமலவல்லீ ஸமேத ஸ்ரீ தேவாதிராஜ ஸ்வாமிநே நம:

# "ஆமருவிப் பெருமாளும் ஆலி நாடனும்"

(ஸ்ரீ உ வே D. ***ராமஸ்வாமி ஐயங்கார்***, B A., B.L.)

திருமாலது திவ்ய மங்கள விக்ரஹத்தில் திருமங்கையாழ்வாரைப்போல் ஈடுபட்டு நின்றவர் வேறெவருமிலர். அவரனுபவத்தின் பெருமையை அவரது அறிவு

தரும் பெரிய திருமொழியில் பரக்கப் பார்க்கலாம். அவ்வனுபவத்தில் பற்பல பேதங்கள் காணப்படுகின்றன. பெரிய திருமொழி 108 பதிகங்களில் ஒரு பதிகம் கூட தனக் கென்று பெருது, விரிந்த அந்நூலில் பலதரம் பேசப்பட்டு, பிறகு ஒரு தனிப்பிரபந்தம் (திருவெழுகூற்றிருக்கை) பெற்றபேறு குடந்தை நகர்மேய கோவலனுடையது. பத்துப் பதிகங்களில் பாராட்டப் பெறும் பெருமை திருநறையூர் நின்ற நம்பிக்கும் திருக்கண்ண புரத்து சௌரிப் பெருமாளுக்கும் உண்டு. ஐந்து பதிகங்களால் போற்றப் பட்டவர் அரங்கநகர் மேய அப்பன். அவ்வெம்பெருமான் களெல்லாம் அளிக்காத அனுபவத்தை இவ்வாழ்வாருக்களித் தருளியவர் ஆமருவி நிரை மேய்த்த அமரர் கோமான்—அவன் தான் அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மான், திருவுக்கும் திருவாகிய செல்வன்.

ஏனைய திவ்ய தேசத்தெம்பெருமான்கள் ஒருவராவது ஆழ்வாருக்குக் கலவியின் பத்தை யளித்தார்களில்லை. செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோமான் ஒருவன்தான் திருமங்கை மன்னன் மெல்லிய நிலையறிந்து அவரை ஊடலிலே ஊக்கு விக்காமலும் புலவியின்பம் பயந்து அவரைவிட்டு அகலாமலும் கலவியின்பம் தந்து மகிழ்வித்தஎம்பெருமான். இந்தஊர் எம்பெருமானோடு திருமங்கையாழ்வார் கடுமையாக ஊடி, ஏசிப்பாடிய திருமொழி "நும்மைத் தொழுதோம்" திருமொழி (IV—9) [அர்ச்சா எம்பெருமானோடு ஊடுவது என்பது திருமங்கையாழ்வாரொருவரே செய்யக்கூடியது. மற்றை ஆழ்வார்கள் ஊடியது விபவத்தில் — அதிலும் கிருஷ்ணாவதாரத்தில்]. ஊடுதல் காமத்துக்கின்பம் தான். ஆனல் அதற்கின்பம் கூடிமுயங்கப் பெறின். அவ்வாறே புலவியும். புலவியாவது ஊடலின் முதிர்ச்சி; கூடியும் கூட்டமின்மை. இப்புலவியைக் கலியனுக்கு அளித்தவர் அரங்கநகர் அப்பன். அவ் வெம் பெருமானுக்குப் புலவியளிப்பதிலுள்ள வல்லமை திருநெடுந்தாண்டகத்தில் நன்கு விளங்குகின்றது. 23-ம் பாசுரத்தில் கனவிலளித்த புலவியும் 24 ம் பாசுரத்தில் நனவிலளித்த புலவியும் பேசப்பட்டமை காண்கிறோம். புலவியளித்து விட்டுப் "புனலரங்கமூரென்று" போயினமையை 24-வது, 25-வது பாசுரங்கள் பேசுகின்றன. அப்படியிருக்க அடுத்த பாசுரமான 26-ம் பாசுரத்தில் (தேமருவு பொழிலிடத்து) அணி யழுந்தூர் வாழும் ஆமருவி நிரை மேய்த்த அமரர் கோமானுக்கு. அறுகால சிறுவண் டைத் தூது விட்டிருப்பதை உற்று நோக்கியுணர வேண்டும். அவர்க்குக் கலவி (கூட லின்பம்) அளித்த பெருமான் அழுந்தூர் அம்மான். இதைப் பிறகு விளக்குவோம். அரங்க நகரப்பன் தந்த புலவியால் நொந்த நெஞ்சாறல் தீரக் கலவியளித்து வாழ்விப் பானிவன் என்ற திடநம்பிக்கை காரணமாகவே 26-ம் பாசுரத்தில் அழுந்தூருக்குத் தூது விடுகிருள் பரகாலநாயகி. பராங்குச நாயகி (நம்மாழ்வார் நாயகி) யைப் போல் தூது விடுவதில் தேர்ச்சி பரகால நாயகிக்குக் கிடையாது நான்கு திருவாய்மொழி களில் ஆர அமர, பத்துப் பத்துப் பாசுரங்களில் தூதுவிட்ட ஆழ்வாரெங்கே, "தூவிரிய" திருமொழியில்(III—6) அடுத்த ஊரான வயலாலிக்குத் தூதுவிட முற் பட்டு நான்கே பாசுரங்கள் பாடியவுடன் ஐந்தாம் பாசுரத்தில் மறந்து நேரில் தன் ஆற்ருமை சொல்லி அழுதலமரும் இத் திருமங்கை யெங்கே! ஆகையால் திருமங்கை யாழ்வார் அனுப்பும் தூது சாலச் சிறப்புடைத்து-நன்கு ஆராய்ந்து, அறிந்து புனலரங் கத்துக்குத் தூது விடாது, அணியழுந்தூர் நின்ருனுக் "கின்றே செல்ல" ஒரு தூது விடப்படுகிறது. என்ன, எப்படி ஆமருவிப் பெருமாள் ஆலி நாடனுக்கு அவ்வளவு இன்ப விஷயமானுர் என்று அறிய; பெரியதிருமொழி (VII—5) "தந்தை காலில்"

திருமொழியை, அதனுள்ளும் 6, 7, 8 பாசுரங்களைப் படித்துணரவேண்டும். முதல் முதலாக, ஏடிலங்கு தாமரைபோல் செவ்வாய் முறுவல் செய்தருளி, மாடு வந்து என் மனம் புகுந்து என் நீலக்கண்கள் பனி மல்க நின்றார், (7) அதற்குப் பிறகு நிகழ்ந்ததை அடுத்த 8-ம் பாசுரத்திலிருந்து ஊகித்தறிய வேண்டும். "வஞ்சி மருங்குல் இடைநோவ மணந்து நின்ற கனவகத்து, என் நெஞ்சு நிறையக் கைகூப்பி நின்றார்." கொடியைப்போல் மிக மெலிந்த எனது மத்தியப் பிரதேசம் நோவடையும்படி என்னுடன் கூடிக் கலந்தமையால் எனக்கு ஏற்பட்ட நலிவுக்கு என்னிடம் மன்னிப்புக் கேட்கும் முறையில் அழகிய தன்னிருகரங்களையும் கூப்பி அஞ்சலித்து நின்றான். இது ஸ்வப்ன கல்பமான, அதாவது இன்பக் கனவுபோல் நடந்த நிகழ்ச்சி. உடனே என் மனம் பேரின்பமெய்தியது. அன்பர்காள், இத்தகைய நிகழ்ச்சி நிகழ்ந்ததாக வேறு எந்த ஆழ்வாராவது பாடியிருக்கிறாராவென்று ஆராய வேண்டும். இவ்வாழ்வாருக்குத் தான் வேறுஎம்பெருமான் எவராவது இத்தகைய கலவியின்பத்தை அளித்திருக்கிறானா என்றும் ஆராய வேண்டும். அப்பொழுதுதான் ஆலி நாடனுக்கு ஆமருவிப் பெருமாள் அளித்த தனிப் பேரருளின் பெருமை விளங்கும்.

தமது ஆசை நாயகனது இருப்பிடமான அழுந்தூரை எப்படியெல்லாம் வர்ணித்து இன்புறுகிறார் ஆழ்வார்! அவ்வூர் வீதிகளும் கழனிகளும் ஆழ்வாரைப் பரவசப் படுத்துகின்றன. முதுநான்மறை வீதி தோறும் அலையார்கடல்போல் முழங்குமாம். "தந்தை காலில்" திருமொழி முழுதும் வீதிக்கும் வயலுக்கும் சிறப்புக் கூறுவன. கடைசிப் பாசுரம் ஒன்று காண்மின். நெல்லில் குவளை கண்காட்ட நீரில் குமுதம் வாய் காட்ட அல்லிக் கமல முகம் காட்டும் சுழனி அழுந்தூர்" மற்ற எம்பெருமான்களுக்கிடாத இரு அழகிய திருநாமங்கள் அழுந்தூர் எம்பெருமானுக்கு இடப்பட்டிருக்கின்றன. ஒன்று "திருவுக்கும் திருவாகிய செல்வன்" மற்றொன்று 'ஆமருவி நிரை மேய்த்த அமரர் கோமான்' எளிமைக்கும், மேன்மைக்கும் சேர அழகிய திருநாமங்கள். திருவின் சேர்த்தியால் நமக்கு எளியன். ஏன்? பசுக்கூட்டங்களுக்கும் எளியன். அப்படியிருக்கச் செய்தேயும் அமரர் கோமான், திருவின் மணாளன்– உயர்வறவுயர் மேன்மைக்கு இவையிரண்டும் இலக்கணங்கள்.

இவ்வெம்பெருமானுக்கு ஆமருவி நிரை மேய்த்தமையே முக்கிய அடையாளமாக வைத்துப் பாடியது "வேய் மருதோள்" திருவாய்மொழியின் சொற்களையும் கருத்துக்களையும் பின்பற்றியேயாதல் வேண்டும். திருமங்கையாழ்வாருக்குத் திருவாய்மொழியில் நிரம்பப் பயிற்சியுண்டு. "இருந்தமிழ் நூல் புலவன்" என்று தம்மைச் சொல்லிக் கொள்ளும்போது திருவாய் மொழிக்கு "இருந்தமிழ்நூல்" என்று நம்மாழ்வார் இட்டபெயரை நினைவூட்டுகிறார். "என் நெஞ்சத்துள்ளிருந்து இருந்தமிழ்நூல்" என்றிவை மொழிந்து."

அத்திருவாய் மொழியில் முதற் பாசுரத்தில் "ஆமருவி நிரைமேய்த்த" என்றும், 10ம் பாசுரத்தில் "திவத்திலும் பசு நிரைமேய்ப்புவத்தி" என்றும் உள்ளதைச் சேர்த்து "ஆமருவி நிரை மேய்த்த அமரர் கோமான்" என்ற திருநாமத்தைப் புனைந்திருக்க வேண்டும். திவத்திலும்—பரம பதத்தில் கூட பசு மேய்ப்பவனான படியால், "அமருவி நிரை மேய்த்த அமரர் கோமானாகிறான்" (நித்ய ஸூரிநிர்வாஹகன்) இத்திருவுக்குத் திருவாகிய செல்வன் ... ... ... ... *

# பெரிய கோயில் அண்ணரும் — பெருமாள் கோயில் அண்ணரும்

(திரு. நா. வேணுகோபால் நாயகர், பி.ஏ., பி.எல். வழக்கறிஞர்
செயலாளர்: ஸ்ரீ வைஷ்ணவ மகா சங்கம்)

## பிங்கள மார்கழி--திருப்பாவை காலக்ஷேப பாராட்டுரையின் சுருக்கம்

பகவத் பாகவத ஜகதாசார்யர்களின் திருவடிகளில் அடியேன் வணக்கம்.

இந்தப் பிங்களவாண்டில் நமது பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் திருமேனி பாங்குடன் திருப்பாவைக் காலட்சேப வேள்வியைத் தலைக் கட்டும் இத் தருணத்தில் ஸ்ரீ ஸத்காலக்ஷேப ஸபையாரின் சார்பில் நமது ஸ்ரீ ஸ்வாமி களுக்கு மங்களாசாசன விண்ணப்பத்தை ஸமர்ப்பிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

ஸ்ரீ ராமாநுஜர் திருவவதரித்தபின் நிகழும் 16–வது பிங்களவாண்டான இவ் வாண்டின் சீர்மையைச் சென்ற ஆண்டு மார்கழியிலேயே முன்கூட்டியே ஸ்ரீ வைஷ் ணவ உலகிற் கறிவித்து இவ்வாண்டைச் சிறப்பாகக் கொண்டாடவேணுமென்று நியமித்தருளியவர் நம் ஸ்வாமி. ஸ்ரீ மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு நிறைவு விழாவைச் சென்ற சாதாரணவாண்டில் சிறந்த முறையில் கொண்டாடவேண்டு மென்று அறிவித்ததோடு "ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா" என்று மகுடமிட்ட தொரு நூலை வெளியிட்டருளினர். 'நள' ஆண்டில் ஸ்ரீ ஆண்டாளும் திருமங்கையாழ் வாரும் திருவவதரித்தருளினர். அதற்காக ஆண்டாள் அருளிய திருப்பாவையைப் புதுமையான உரையுடன் வெளியிட்டுள்ளார். திருமங்கைமன்னன் அருளிய ஆறு திவ்யப் பிரபந்தங்களினுரையையும்ஒரேபுத்தகமாக வெளியிட்டுள்ளார். எம்பெருமானார் அவதரித்த பிங்கள ஆண்டிற்காக 931 வைரங்கள்பொதிந்த ஸ்ரீராமாநுஜபக்தஹஸ்த பூஷணம் என்ற திருவாபரணத்தை அருளியுள்ளார். பல சபைகள் பல முயற்சிகள் எடுத்து ஒரு மலர் வெளியிடத் திக்குமுக்காடும் இந்நாளிலே ஓசைபடாமல் சர்வசாதா ரணமாக இப்படியான ஓர் பேருபகாரத்தைச் செய்தருளியமைக்கு வியக்கவேண்டும். தமிழ்கூறும் நல்லுலகில் எல்லாம் சங்க முழக்கம் செய்து தரிசனத்தை வளர்க்க 30 ஆண்டுகட்கு முன்தாம் தொடங்கிய திங்கள் ஏட்டிற்கு ஸ்ரீராமாநுஜன் என்றே திரு நாமம் சூட்டியுள்ளார்.

மேலும் இவ்வாண்டில் திருப்பாவை உபந்யாசத்தில் சங்கத் தமிழ்மாலையில் முப்பதும் தப்பாமே ஒவ்வொரு அடியையும் எதிராஜரின் விஷயமாகவே வைத்து தின மும் அக்கார அடிசிலாக சாதித்தருளினர். இவ்வாண்டு காலட்சேபத்தை அனு பவித்தபோது திருவரங்கச்செல்வமுற்றும் திருத்திவைத்த அந்தத்திருப்பாவை ஜீயரின் புகழேபோல் தென்னாசார்ய ஸம்பிரதாய முழக்க வீரரும் நம் திருப்பாவைப் பெருக்கரு மான ஸ்வாமிகளுடைய புகழும் சோதிச்சுடர்விட்டுப் பிரகாசித்தது.

பெரியகோவில் அண்ணராம் ஸ்ரீராமானுஜர் காண்டகுதோள் அண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்பூண்ட அன்பாளர் ஆவர். நம்பெருமாள் கோவில் அண்ணருக்கு பேரருளாளன் மீதுள்ள பக்தியும்பாசமும் பேசத்தான் ஆவதுண்டோ? பேரருளாளன் புறப்பாடு கண்டருளுகையில் நமது ஸ்ரீஸ்வாமிகள் திவ்வியப்பிரபந்த தொடக்கம் செய்தருள்வதைக் கேளாத செவி என்ன செவியே?

பக்தர்கள் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கீழ கோபுரத்தின் எதிரில் உள்ள ஸ்ரீஉடையவரின் திருமாளிகையைச்சேவித்தபிறகு அதன் அண்மையில் உள்ள நமதுபெருமாள் கோவில் அண்ணரின் திருமாளிகையையும் சேவித்து வியக்கின்றூர்கள் என்று கூறுவது உபசாரமன்று.

"நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்" என்று சிலம்பாறுடை மாலிருஞ்சோலை நின்ற சுந்தரனைச்சுரும்பார் குழற்கோதை தொகுத்துரைத்த செந்தமிழைச் சிந்தையுள் தேக்கிய பெரியகோவில் அண்ணர் அவ்விதமே பிரசாதம் சமர்ப்பித்தது ஜெகத்பிரசித்தம். நமது பெருமாள் கோவில் அண்ணரும் தமது பகவத் விஷய காலக்ஷேபகாலத்தில், "உலகமுண்டபெருவாயா" என்ற பதிகத்தின் சாற்றுமுறையைதிவ்யபிரசாதங்களுடனும் திக்குநிறை புகழாளராகவும் திருமலைதேவஸ்தான அறங்காவலர் குழுத்தலைவராகவும் திகழ்ந்த பத்மஸ்ரீ K. வெங்கடசாமிநாயுடு அவர்கள் உதவியுடன் நிறைவேற்றி வைத்தார். மேலும் "கங்குலும் பகலும்" சாற்றுமுறையை திருவரங்கத்தில் நடத்தி அருளினூர். திருமாலிருஞ்சோலையில் நூறுதடாவில் வெண்ணெயும், நூறுதடா நிறைந்தஅக்காரவடிசிலும், மாலிருஞ்சோலைநம்பிக்கு ஸமர்ப்பித்து ஆண்டாளுடையபாரிப்பை மறுமுறை தலைக்கட்டி யருளினூர்.

பெரிய கோவில் அண்ணரின் மகத்தான சேவை வாதியர்கள்வாழ்வு அற்றுப் போகும்படி பண்டரு மாறன்பசுந்தமிழ் ஆனந்தம் பாய் மதமாய் விண்டிட மெய்ம்மை கொண்ட நல் வேதக் கொழுந்தண்டம் ஏந்திக் குவலயத்தே இராமாநுஜ முனிவேழமாக எழுந்தருளியது தான்.

மறை வாதியராம் புலி மிக்கதென்று வலி மிக்கசீயம் இராமாநுஜர் இப் புவனத்தில் வந்தமையைப்போற்றுகிறது ஸ்ரீவைஷ்ணவவுலகம் அவ்விதமாகவே இக்காலத்து நமது பெருமாள் கோவில் அண்ணரும் பேதையர் சொல்லும் அல்லல் எல்லாம் வாதில்வெல்லும் மெய்ம் மதிக்கடலாக எழுந்தருளி யிருக்கிறூர். அறுபது ஆண்டுகட்கு முன் ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் சுவாமி தீர்க்கதரிசனமாக, நமது சுவாமிகளுக்குப் பிரதிவாதிபயங்கரம் என்ற பட்டம் வம்சபரம்பரைப் பட்டமாக அமையாமல் சுவாமிக்கே அசாதாரணமான சிறப்புப்பட்டமாகவேபொருந்திப்பொலியும் என்றுஉண்மையை வெளியிட்டார். நம் சுவாமிகள் பிரதிவாதிகளுக்கு பயங்கரராகவே எழுந்தருளியிருப்பதுயாவரும் ஒப்புக்கொள்ளக்கூடியதே ஆகும். நற்பொருளை இந்நானிலத்தே வந்து நாட்டினமையால் நமது பெருமாள் கோவில் அண்ணரும் பெரிய கோவில் அண்ணரைப்போல் ஒரு நூற்றுண்டு வாழவும் அதற்குமேல் ஒரு வெள்ளி விழாவைக் கண்டருளவும், காரேய் கருணை இராமாநுசனை வணங்குவோமாக! ... ... •

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஸ்ரீ ராமானுஜ பக்தஜன ஸபா, பெரம்பூர், சென்னை-600011.

### (R. SRINIVASAN and V. P. K. CHARYA)

ராமாநுஜார்ய திவ்யாக்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம் என்ற திருவாக்குக்கு ஏற்ப சென்னை மாநகரிலே பெரம்பூரில் ஸ்ரீராமாநுஜ பக்தஜன ஸபா என்ற பெயரிலே

ஸ்ரீ ராமாநுஜ தர்சன கைங்கர்யத்தைக் குறிக்கோளாகக் கொண்டு கடந்த சுமார் ஏழு மாத காலமாக இச் சபையினர் பலவிதமான ஆஸ்திகத் தொண்டுகள் செய்து பக்த ஜனங்களுக்கு ஸ்ரீவைஷ்ணவ மார்க்கத்தின் கொள்ளமாளா இன்ப வெள்ளம் ஊட்டி உய்யும் வகை செய்து வருகின்றனர்

கடந்த 11-6-77 முதல் 6 நாட்கள் நடைபெற்ற ஆரம்ப விழாவில் தலைமை நீதிபதி ஸ்ரீமான் கோவிந்தன் நாயர் முன்னாள் நீதிபதி ஸ்ரீமான் கிருஷ்ண சாமி ரெட்டியார், உபந்நியாசகர்கள் ஸ்ரீ உ.வே வேளுக்குடி வரதாச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான் ஸ்ரீ உ. வே. R. கண்ணன் ஐயங்கார் ஸ்வாமி முதலியோர் பங்கு பெற்றுச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். சென்னை மாநகரில் உள்ள பல பகுதிகளில் இருந்தும் உபய கலையார்களையும், பிறரையும் அங்கத்தினர்களாகக் கொண்டு இந்த சபை நடந்து வருகிறது. பெரம்பூரிலே திருவேங்கட முடையான் கோயிலொன்று திருமலைக்கோயிலை அடியொற்றிக் கட்டுவிப்பது முக்கிய நோக்கம். ரிஜிஸ்டர் செய்யப்பட்டது, இச்சபை.

காஞ்சி மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி ஸ்ரீமத் பரமஹம்ஸேத்தியாதி த்ரிதண்டி ஸ்ரீமன் நாராயண ஜீயர் ஸ்வாமி, பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி ஜீயர் ஸ்வாமிகள், பரமஹம்ஸேத்தியாதி ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமி போன்ற மஹநீயர்களையும் மற்றும் பல பெரியோர்களையும் போஷகர்களாக (பேட்ரன்) கொண்டு நடந்து வரும் இச்சபையில் சமீபத்தில் "ஸ்ரீ ஆண்டாள் உத்ஸவம்" என்ற பெயரிலே உபந்நியாசங்கள், பாட்டுக் கச்சேரி, பக்திரஸ கோலாட்டம் நாட்டியங்கள் சிறப்பாக நடத்தியதுமன்றி ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி பொன்னுடை போர்த்தி கௌரவிக்கப்பட்டார். நம் ஸ்வாமியின் திருக்கரத்தால் ஸ்ரீ ஆண்டாள் படம் திருக்காப்பு நீக்குதலும் பக்தி விஷய புத்தகசாலைத் துவக்கமும் ஸ்வாமியின் மதுரமான உபந்நியாசமும், "கண்டோம்! கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்" என எண்ணும்படி நிறைவேறியது. நித்யஸ்ரீர் நித்ய மங்களம்

## சென்னை மேலமாம்பலத்தில் விசேஷஸமாவேசம்.

நேற்று 6—2—78 திங்கட்கிழமை மாலை 4 மணிமுதல் 6-30வரை சென்னை மேலமாம்பலத்தில் ஸ்ரீமதஹோபிலமடம் ஓரியண்டல் ஹை ஸ்கூலில் கண்கொள்ளாக் காட்சியான விசேஷஸமாவேசம் கூடிற்று ஷை ஹை ஸ்கூலுக்கு வெள்ளிவிழாக் கொண்டாட்டம் என்பதை வியாஜமாகக்கொண்டு ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகா ஸேவக—ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ ஸ்ரீரங்கசடகோபயதீந்திர மஹா தேசிகனென்னும் ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கருக்கு சதாப்தீ மஹோத்ஸவம் [நூற்றாண்டு நிறைவுவிழா] வெகு சிறப்பாக நடைபெற்றது. அவண், தமிழ்நாட்டு கவர்னரான, கனம் ப்ரபுதாஸ்பட்வாரி அவர்களும், ஜகத்ப்ரஸித்த வைபவசாலியாய், ஸத்யஸங்கல்ப பிருதாலங்க்ருதரான ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமிகளும் ஸபையை அலங்கரித்திருந்தார்கள். ஷை ஹை ஸ்கூலின் நிர்வாஹகரான ஸ்ரீமது பயவே. வாஸுதேவாசார்ய ஸ்வாமியின் அருள்மிகுந்த ஆஹ்வானத்தினால் அடியேனும் விடைகொள்ள நேர்ந்தது. ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கரின் கல்விச்சிறப்பையும் ஆத்மகுண பூர்த்தியையும் உள்ளபடியறிந்தவர்களில் அடியேன் தலைவனாதலால் தெரிந்தவரையில் அவற்றை விஜ்ஞாபித்துக் கொள்ளும் பாக்கியம் யாத்ருச்சிகமாக நேர்ந்ததற்குப் பரமஸந்தோஷ மடைந்தேன். —பத்ராதிபதாஸன்.



பெரம்பூரில் ஆண்டாள் திருவுருவப்படத்தை ஸ்ரீமத் P. B A. ஸ்வாமி திறந்தருளும் காட்சி



பெரம்பூரில் ஸ்ரீகாஞ்சீ P. B A. ஸ்வாமி கௌரவிக்கப்படுதல்.

## ஸ்ரீ அஹோபில மடம் ஓரியண்டல் பள்ளியின் வெள்ளிவிழாவும் 42-வது பட்டம் ஸ்ரீமதழகிய சிங்கரின் 100வது திருநக்ஷத்திர மஹோத்ஸவ வைபவமும்.

மேற்கு மாம்பலம் ஸ்ரீ அஹோபிலமடம் ஓரியண்டல் பள்ளியின் வெள்ளிவிழாவும், 42வது பட்டம் ஸ்ரீமதழகிய சிங்கரின் 100வது திருநக்ஷத்திர மஹோத்ஸவமும் எம்பெருமானாரின் 931-வது அவதார ஸம்வத்ஸரமான பிங்கள தைத்திங்கள் (6-2-78) மாலை தமிழக ஆளுநர் மேதகு பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது.

ஆளுநர் தமது உரையில், தனது அதிர்ஷ்டவசமாக மிகச்சிறந்த வகையில் பணியாற்றிவரும் இப்பள்ளியின் வெள்ளிவிழாவில் கலந்துகொள்ளும் பாக்கியம் கிட்டியதெனக் கூறினார். மேலும், வேதம், புராணம், இதிஹாசம், தர்மசாஸ்திரம் போன்ற நிதிகளனைத்தும் சம்ஸ்கிருதத்தில் பொதிந்து கிடக்கின்றன வென்றும், சம்ஸ்கிருதத்தில் சிறந்த வல்லுநர்கள் ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகளில் சிறந்து விளங்குகிறார்களென்றும், ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரைப்போல, சம்ஸ்கிருதத்தில் சாகுந்தலம் ஸ்வப்நவாஸவதத்தம் போன்ற சீரிய நாடக, காப்பிய சிற்பிகளான காளிதாஸன் பவபூதி, பாரவி போன்ற கவிகள் இயற்றியுள்ளனரென்றும், நமதுதேசம் இது போன்ற புராதனச்சொத்துக்களால் சிறந்து விளங்குகிறதெனக் கூறி மேற்படி பள்ளிக்கூடம் அமைதியான முறையில் நல்லதொருபணியைச் செய்து, வருங்கால சந்ததிகளை நல்ல கலாசாரத்துடன் கூடிய வகையில் உருவாக்கி வருகிறதெனவும் பாராட்டினார்-மேலும் ஆளுநர் மேற்படி பள்ளிக்கு 500ரூபாய் நன்கொடைவழங்கினார்.

பின்பு, திரிதண்டி ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமி தமது உரையில் ஸம்ஸ்கிருதம் எல்லா பாஷைகளுக்கும் மூலமாகுமென்றும் மாமுனிவரான அகத்தியர் சம்ஸ்கிருதத்தில் பலக்ரந்தங்களை இயற்றியுள்ளாரென்றும், சம்ஸ்கிருதபாஷை தோஷமற்றதும், குணமுள்ளதெனவும், அப்படிப்பட்ட சிறந்த பாஷையை அப்யஸிக்காமலிருப்பதோ, மறப்பதோ மாத்ருதுரோகம் செய்வதுபோலாகுமெனக் கூறினார்.

பிறகு, மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி சதாப்தீ மஹோத்ஸவம் கண்டருளும் ஸ்ரீமத்பரமஹம்ஸ மஹா ஸ்வாமியின் வைபவங்களையும், ஸ்ரீஸ்வாமியோடு தமக்கிருந்த நெருங்கின பரிசய விசேஷங்களையும் மனமுருக ஒருமணிகாலத்திற்கும்மேலாக அருளிச்செய்தார்.

"ஸ்ரீரங்கவண்சடாரிபோ: யதிசேகரஸ்ய
விச்வப்ரஸித்த விபவஸ்ய குரோ: ப்ரபாவம்,
வக்ஷ்யாமி ய: கலு சதுர்ஷ்வபி சாஸ்த்ரஸிந்துஷு
அத்யந்தமேவ ஸுபரிஷ்க்ருததீர் விரேஜே"

என்கிற சுலோகத்தை முன்னம் ஸாதித்து விளக்கினார். 1906ஆம் வருஷத்தில் (அதாவது இற்றைக்கு எழுபத்திரண்டு ஆண்டுகட்குமுன்) தாம் ஸ்வாசார்யரான

ஸ்ரீபிரதிவாதிபயங்கரம் ஜகத்குரு—காதி அனந்தாசார்ய ஸ்வாமியோடுகூட தை யமாவாஸ்யை கருடோத்ஸவம் ஸேவிக்கத் திருநாங்கூருக்குப் போயிருக்கையில் அப்போது (இஞ்சிமேட்டழகியசிங்கர்) பூர்வாச்ரமத்தில் (இஞ்சிமேடு. ரங்கநாதாசாரியர் ஸ்வாமி) ஸ்ரீமுஷ்ணம் ஸ்ரீமத் ஸ்வர்ணம் ஸ்ரீக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியோடுகூட அவ்விடம் உத்ஸவஸேவார்த்தமாக எழுந்தருளியிருந்ததாகவும், அப்போதுமுதலாகவே ஸ்ரீஸ்வாமியோடு தமக்கு நெருங்கிய பரிசயம் நேர்ந்ததாகவும், ஸ்ரீஸ்வாமி க்ருஹஸ்தாச்ரமத்தில் காஞ்சீபுரம் தென்னண்டை மாடவீதியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தபோது ஏறக்குறைய பத்து வருடங்கள் நெருங்கிப்பழகின வரலாறுகளை விவரித்துரைத்தார். அக்காலத்தில் ஸன்னிதி வீதியில் ஸ்ரீகாதிஸ்வாமி தமது திருமாளிகையில் நடத்தின வித்வத் ஸதஸ்ஸில் பெங்களூர் நெக்குஹள்ளி திருமலாசாரியர் ஸ்வாமி யென்கிற பிரசண்ட வித்வானை ஸ்ரீஸ்வாமி மீமாம்ஸாசாஸ்த்ரத்தில் வென்றருளினதை விவரித்துரைத்தார். ஸ்ரீஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளின பிறகு ஸ்ரீரங்கத்திலும் திருவெவ்வுளூரிலும் ஸ்ரீஸ்வாமியைப் பலகால் ஸேவிக்கப்பெற்ற வரலாறுகளை விஸ்தரித்துக் கேட்போர்மனம் கரையும்படி எடுத்துரைத்தார். திருப்பதியில் பிரபல வித்வத் ஸார்வபௌமராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில், நம் ஸ்ரீஸ்வாமியும் ஸ்ரீகாதிஸ்வாமியும் ஸ்ரீகபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமியும் கூடியிருந்தகாலத்து நிகழ்ச்சிகளைத் தாம் சேவித்திருந்ததை யெல்லாம் விவரித்துரைத்தார் பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி........சுருங்கச் சொல்லில், ஸ்ரீமதழகிய சிங்கர் சதுச்சாஸ்திரங்களிலும் ஆழ்ந்த பாண்டித்யம் பெற்றவரென்றும், ஸ்வாமியினிடம் தமக்கேற்பட்ட பரிசயங்கள் அபரிமிதமென்றும் மேலும் ஸ்ரீமதழகிய சிங்கர் ஒப்பற்ற ஆத்மகுணம் படைத்தவரென்றும், வேதாந்த தேசிகரால் கூறப்பட்ட "ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே ஸ்திரதிய மநகம்" என்ற சுலோகத்தில் கூறப்பட்ட குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாகத் திகழ்ந்தவரென்றும்கூறி மேற்படி பள்ளி மேன்மேலும் இதுபோல் சீரிய பணிகளைச் செய்துகொண்டு சிறந்து விளங்க வேண்டுமெனக் கூறிமுடித்தார் காஞ்சீ ஸ்வாமி.

ஆளுநர் பள்ளியில் பரிசுபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கினர் பள்ளி மாணவ, மாணவிகளால் "துருவசரிதம்" நாடகமாக நடிக்கப்பட்டது. மதுராந்தகம் காலேஜ் பிரின்ஸ்பால் டி ராமஸ்வாமி ஐயங்கார் முதலில் அனைவரையும் வரவேற்றார். மேற்படி பள்ளி தலைமை ஆசிரியர் A. லக்ஷ்மிநரசிம்மன் ஆண்டறிக்கை ஸமர்ப்பித்தார். ராமகிருஷ்ண மிஷன் ஹை ஸ்கூல் ரிடயர்டு தலைமை ஆசிரியர் N. ஸ்ரீநிவாஸாசாரியர் நன்றி கூறினர்.

இங்ஙனம்,
**N. V. வாஸுதேவாசாரியார், கௌரவ நிர்வாகி.**



ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்,







ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# சிறுபுலியூர் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி விஜயம்

ஸ்ரீ காஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம். மஹாவித்வான்.

**அண்ணங்கராசாரியர் எழுதியது**

ஸ்ரீவில்லிபுத்தூரில் அறுபத்தைந்தாண்டுகட்குமுன்பு சதுச்சாஸ்த்ர வித்வத் ஸார்வ பௌமராய் ஞானமனுட்டான மிவை நன்ருகவே யுடையராய் சுத்தஸத்வநிதியா யெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. சிறுபுலியூரண்ணன் ஸ்வாமி ஸாமாந்யஶாஸ்த்ரங்களிலும் அத்யாத்ம சாஸ்த்ரத்திலும் பல க்ரந்தங்கள் அருளிச் செய்திருந்தார். அவற்றுள் ஸதநுஷ்டாநதர்ப்பணம் என்பதும் ஒரு திவ்யக்ரந்தம். அஃது அவதரித்துத் தொண்ணூற்ருறு ஸம்வத்ஸரங்கள் கடந்தன. அது நெடுநாள்களாகியும் அச்சிடப்படாமலிருந்த குறைதீர இந்தப் பிங்கள வாண்டின் நினைவு மலராக ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்த வித்வச் சிகாமணி. கனபாடி. திருக்கண்ணபுரம் ஸௌரி ராஜய்யங்கார் ஸ்வாமியால் அச்சிடுவித்து வெளியிடப்பட்டது. அந்த மஹாக்ரந்தம் மிக விபுலமானதாகையால் இப்போது பூர்த்தியாக வெளியிடப்படவில்லை. தர்ப்பணமென்கிற க்ரந்த நாமத்திற்கேற்ப பரிச்சேதங்களுக்கு ப்ரதிபலநம் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அதில் ஏழு ப்ரதிபலநங்கள் மட்டுமே (முதற்பகுதியாக) இப்போது வெளியிடப்பட்டுள்ளது. தென்ஞசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களின் அனுட்டானங்களுக்கு ப்ரமாணப்ரதர்ஶந பூர்வகமாக ப்ராமாண்ய ஸமர்த்தனமே இந்த க்ரந்தத்தின் முழுநோக்கு. இது வடமொழி நூலாகையாலே தேவநாகரலிபியில் அச்சிட்டுள்ளது.



கோயிலில் வாழும் ஸ்ரீமதுபயவே. வித்வான். மதுராந்தகம் ஈச்சம்பாடி வீரராகவாசாரியர் ஸ்வாமி [அடியேனுடைய ஸௌஹ்ருந்மணியானவர்] இந்த க்ரந்தத்தை ஆராயப்புகுந்து ஸதநுஷ்டாநதர்ப்பண விமோதநம் என்கிற ஒரு சிறுசுவடியை வடமொழியிலெழுதி யச்சிட்டு வெளியிட்டுள்ளார்ஸமீபகாலத்தில். அதை நாம் ஆராயப் புகுந்து ஸதநுஷ்டாந தர்ப்பணரக்ஷணம் என்றொருநூலை வடமொழியிலேயே யெழுதி

அதை நமது வைதிகமநோஹராபத்ரிகையில் (தேவநாகரலிபியிலேயே) அச்சிட்டு வருகிறோம், விரைவில் வெளி வரும். ஸம்ஸ்க்ருத பரிசயமில்லாதாரும் எளிதாகத் தெரிந்துகொள்வதற்காகத் தமிழிலு மெழுதுகிறோ மீண்டு. முதலில் அவதரணிகா என்றொரு சீர்ஷிகையிட்டுள்ளார் விரோதநகாரர்; அதற்கு எங்கே முடிவு? என்பது தெரியவில்லை. முதற்பக்கத்தில் முடிவென்று வைத்துக்கொள்வோம். அப்பக்கத்தில் இந்த ஸ்வாமி எழுதியுள்ளதாவது—

"ஸ்ரீமத் சிறுபுலியூர் ஶுத்தஸத்வம் வரதாசார்ய ஸ்வாமி அருளிச்செய்ததாக வெளியிடப்பட்டுள்ள ஸதநுஷ்டாந தர்ப்பண மென்கிற க்ரந்தம் ப்ரபந்ந பரமைகாந்திகளுக்கு நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானம் ஆவஶ்யகமென்பதை வெளியிடுமதாய்ப் பலப்ரமாணங்களை மேற்கோளாகக் காட்டித் தனக்கு அபிமதமான அர்த்தங்களை நிலைநாட்டு மதாகி ப்ரமாணஶரணர்கள் விரும்பிக் கடாக்ஷிக்கக் கூடியதாகவுள்ளது. விஶேஷித்துச் சொல்லுமளவில், இப்பெரியார் நம்மாழ்வார், பகவத்ராமாநுஜர், வேதாந்ததேசிகன் ஆகிய மூவரைப் பற்றியும் ப்ரஹ்மாண்டபுராண பாத்மபுராண விஷ்ணு ரஹஸ்யாதிகளில் மிகவும் ப்ரஶம்ஸிக்கப் பட்டிருப்பதை ப்ரமாண புரஸ்ஸரமாக எடுத்துக்காட்டி, தமக்கு அம் மூவரிடத்திலும் பரமபக்தியிருப்பதையும் விளக்கி, ஸகலஸம்ப்ரதாயஸ்தர்களும் இம்மூவர் பக்கலிலும் விஶேஷபக்தி செய்ய வேணுமென்று இனிமையாக உபதேஶித்தருள்வதால் இந்த ஸதநுஷ்டாந தர்ப்பணக்ரந்தம் வக்த்ருவைலக்ஷண்ய முடையதென்னத் தட்டில்லை. ஆனாலும், கண்ணாடிக்கு உபாதி வஶத்தாலே மாலிந்ய மேற்படுவது போல இந்நூலுக்கும் ஆங்காங்கு மாலிந்யம் விளைந்திருக்கின்றது; ஆகவே அதை ஶோதிக்க வேண்டுவது அவஶ்யமாகின்றது. வைஶ்வதேவ கைவல்யாதி விஷயங்களில் மாலிந்யம் காண்கிறது. அதைப்பற்றிப் பிறகு ஶோதனம் பண்ணுவோம். முதன் முதலாக ஊர்த்வ புண்ட்ரதாரண விஷயகமான ஆறுவது (ப்ரதிபலநம்) பரிச்சேதம் ஶோதிக்கப்படுகிறது; மூக்கிலே பாதம்வைத்துத் திருமண்காப்பு இடுகிற விஷயத்தில் ஸ்ரீமந்நிகமாந்த குருவின் உபதேஶத்தையும் அனுட்டானத்தையும் ப்ரமாணமாகக் கொள்ளுகிற இந்த ஸதநுஷ்டாநதர்ப்பணகாரஸ்வாமி, தேசிகனுடைய அந்த உபதேஶாநுஷ்டானங்களையே ஆதரிக்க வேண்டு மென்பதற்கு மேல்வரும் ப்ரமாணங்களைக் காட்டும் முகத்தால் மஹோபகாரம் செய்தருளுகிறார்"—ஆக இவ்வளவும் முதற்பக்கத்திலுள்ள அவதரணிகையின் நேர்மொழிபெயர்ப்பு.

ஸ்வாமி தேசிகன் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "நிஜமுகதோஷம் நிர்மலேஷ்வபி தர்ப்பணேஷு ஸமர்ப்பயந்தி" என்றொரு வாக்கிய மருளிச்செய்கிறார். அதற்கு ஏற்ற லக்ஷ்யம் இதுவேபோலும். ஸதநுஷ்டாநதர்ப்பண க்ரந்தம் வடமொழியிலிருப்பதாலும் தேவநாகரலிபியிலிருப்பதாலும் விபுலமாயிருப்பதாலும் அதனை யார் ஊன்றி நோக்கப்போகிறார்களென்றெண்ணி விப்ரலம்பவிதக்தரான மதுராந்தகம் ஸ்வாமி மனம் போனபடியும் கைபோனபடியும் எழுதியுள்ளார். அந்த தர்ப்பண நூலில் பக்கம் 142ல்—"ஸ்ரீரங்காதி திவ்ய தேஶேஷு ஸர்வத்ர பரகால யதீந்த்ராதி—காரித ப்ராகார கோபுராதிஷு ஸ்தூலபீடோபரி ஸபாத-ஊர்த்வபுண்ட்ரம் ப்ரகாசதே........."

(பொருள்) ஸ்ரீரங்கம் முதலான ஸகல திவ்யதேசங்களிலும் திருமங்கையாழ்வார் எம்பெருமானார் முதலானாரால் ஏறியருளப்பண்ணப்பட்ட திருமதிள்கள் கோபுரங்கள் முதலானவற்றில் ஸ்தூலமான பீடத்தின்மேல் பாதஸஹிதமான திருமண்காப்பு காணப்படுகிறது—என்றும்;

அதிலேயே பக்கம் 145ல் 'ஸ்ரீபாத்மபுராணே' என்று தொடங்கும் வாக்ய ச்ரேணியில்–''கண்டாத்மாநம் ஸ மஜ்ஜாதம் நிகமாந்தகுரும்புதம்* இத்யாதி ப்ரமாண ரீத்யா கண்டாவதாரபூத ஸ்ரீமந்நிகமாந்த குரு—அர்ச்சாதிவ்யமங்களவிக்ரஹாதௌ ஸஸ்ரீசூர்ணம் ஸபாதோர்த்வபுண்ட்ரம் அத்யாபி ஸமுஜ்ஜ்வலதி; விஸ்தரஸ்து ஊர்த்வ புண்ட்ரவிஜய–ஊர்த்வபுண்ட்ர நிர்ணயக்ரந்தாதௌ த்ரஷ்டவ்ய:' — (பொருள்) பௌராணிகப்ரமாணங்களின்படி விஷ்ணுகண்டாவதாரபூதரான ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவின் அர்ச்சைத்திருமேனி முதலானவற்றில் ஸ்ரீசூர்ணத்தோடும் (நாஸிகா) பாதத்தோடுங் கூடின திருமண்காப்பு இற்றைக்கும் ஜ்வலிக்கின்றது. ஊர்த்வபுண்ட்ர விஜயம், ஊர்த்வபுண்ட்ர நிர்ணய க்ரந்தம் முதலானவற்றில் விரிவு காணத்தக்கது—என்றும் சிறுபுலியூர் ஸ்வாமியால் எழுதப்பட்டுள்ளது.

சிறுபுலியூர் ஸ்வாமியின் தர்ப்பண க்ரந்தம் தொண்ணூற்ருறு ஆண்டுகட்கு முன்பு எழுதப்பட்டதாகக் காண்கிறது. அக்காலத்தில் திவ்யதேசங்களிலுள்ள தேசிக திவ்யமங்கள விக்ரஹங்களில் நவீனர்கள் திருமண்காப்பில் மாறுபாடுசெய்யத்தொடங்க வில்லையென்று இதனுல் வ்யக்தமாகிறது. ஸ்ரீரங்கதேவஸ்தானத்திலுள்ள ஸ்ரீதேசிகவிக் ரஹத்தில் இருந்த தென்கலைத் திருமண்காப்பை வடகலைநாமமாக்கி நீதிமன்றத்தில் ஆயிரம்ரூபா அபராதம் செலுத்தி அதை மூன்று நியாயாலயங்களிலும் ஊர்ஜிதப்படுத் திக்கொண்ட சரித்திரங்கள் இந்த தர்ப்பண க்ரந்தம் திருவவதரிப்பதற்குப் பிந்தியே யென்பதும் ஸ்பஷ்டமாகிறது.

> ''தேசிகனுக்கு ஸ்ரீரங்கநாதனேடு ஸம்பந்தம் அற்றுப் போனலும் போகட்டும்; அவர்க்கு ஆழ்வாராசார்ய கோஷ்டியில் அந்வயம் அறவே ஒழிந்தாலும் ஒழியட்டும்; தேசிகன் திருமூக்கில் நாங்கள் அபுத்த பாதரேகையை இனிமேல் இடமாட்டோம், இடவேமாட்டோம்.:'

என்று பிடிவாதங்கொண்டும், ''எத்தனை தடவை தோல்வியடைந்தாலும் ''ஸமுத்ரோ பந்து:''என்று தைத்திரீயஸம்ஹிதை(வேதம்)முடித்திருக்கிறபடி சதுஸ்ஸமுத்ரபர்யந்த பாந்தவ்யத்தைக்கொண்டே தீருவோம்—என்றிருப்பவர்கள் ஸ்ரீரங்க தேசிகஸந்நிதித் திருவாசற்கொடுங்கையில் பேர்க்கவும் பேராதபடி இற்றைக்கும் விளங்குகின்ற காரைக் கட்டிடமான ஸபாதோர்த்வபுண்ட்ரத்திற்கு நித்யம் மங்களாசாஸனம் பண்ணிக் கொண்டிருக்கின்ருர்களல்லவா ? நம் மதுராந்தகம் நண்பர் அதற்காகவேயன்றோ தம்மூரைவிட்டுக் கோயில் சேர்ந்து தேசிகன் ஸன்னிதிக்கு ஸந்நிஹிதராக வாழ்ந்து வருகின்ருர். முகப்பில் ஸேவை ஸாதிக்கும் அந்தத் திருமண்காப்பை ஸேவியா மலிருக்கும் நாளுண்டோ இவர்தமக்கு? *உண்டெனிலருளே*

ஆரியர்காள்! சிறுபுலியூர் ஸ்வாமியின் தர்ப்பண க்ரந்தத்தில் இவர் விமர் சிக்க வேண்டிய விஷயங்கள் பலபல இருக்க, அவற்றை யெல்லாம் விட்டிட்டு [ஐந்து பரிச்சேதங்களைவிட்டு] திருமண்காப்பு விசாரமுள்ள ஆருவது பரிச்சேதத்தில் (பக்கம்

129ல்) புகுவதற்கு என்ன காரணம்? என்று விமர்சிக்கவேணும்? இந்த விமர்ஶம் மிகவும் ஆவச்யகமல்லவா? தென்கலைத் திருமண்தான் சாஸ்த்ரீயம் என்று தேறி விட்டால் இவர் தமது திருமண்காப்பை நீக்கி அந்தத் திருமண்காப்பை அணிந்து கொள்ளப் போகிறாரோ? வடகலைத் திருமண்தான் ஶாஸ்த்ரீய மென்று தேறிவிட்டால் தென்கலையார்கள் வடகலைத் திருமண் அணியப்போகிறார்களோ? *யேநாஸ்ய பிதரோ யாதா: யேந யாதா: பிதாமஹா:* இத்யாதி ஶாஸ்த்ரார்த்தத்தைக் கடந்து யாரும் நடக்கப்போகிறதில்லையன்றோ? எம்பெருமானார் முதலான நம் பூருவாசாரியர் கள் (வேதாந்த தேசிகனுட்பட) எந்தத் திருமண்காப்பை அணிந்து கொண்டிருந்தார் கள் என்பதை உண்மையாக உலகம் தெரிந்து கொள்வதற்காக விசாரம் செய்யலாம். திருமண்காப்புபற்றிய விசாரத்திற்கு வேறுபலன் கிடையாதென்பது திண்ணம். ஆகவே பூருவாசாரியர்கள் எந்தத் திருமண்காப்பை யணிந்து கொண்டிருந்தார்க ளென்கிற விசாரத்தை இன்று நாம் புதிதாகச் செய்ய வேண்டாதபடி நம் மதுராந்தகம் ஸ்வாமி இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னமே செய்துமுடித்திருக்கிறார். ஸ்ரீரங்கம் ஸ்தலாசார்ய புருஷரான ஸ்ரீஉவே. கபிஸ்தலம் ஸ்வாமி ஸமீபகாலத்தில் ஸ்ரீரங்கம் அட்வகேட் K.N. ஸ்ரீநிவாஸாசாரியர்க்கு விடையாக வெளியிட்ட தத்வார்த்த நிருபண மென்னும் நூலில் பக்கம் 28ல் விளக்கமாகக் காணலாம். காணலாமென்றெழுதிவிட் டால் போதுமா? இங்கெடுத்துக் காட்டுகிறோம். (அதில் பக்கம் 28)

## "D. T. தாதாசாரியரின் இரண்டு விஷயங்கள்

காலஞ்சென்ற D.T. தாதாசாரியர் என்பவரைப்பற்றிக் கீழே அஸக்ருத் ப்ரஸ்தாவம் செய்திருப்பதையொட்டி இங்குத் தெரிவிப்பதை வடகலை யுலகம் முழுவதும் மிகவும் கவனிக்கவேணும். அவர் மறைந்துபோனாலும் அவர் எழுதியிருப்பவை கற்பாந்தத்திலும் மறையமாட்டாவே. அவர் வடகலை என்பது மட்டுமன்று; தாதாசாரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். அதுமட்டு மன்று, ப்ரக்க்யாதிபெற்ற நிருபகர். மடாதிபதிகளனைவராலும் மதிக்கப்பட் டும் ஆதரிக்கப்பட்டுமிருந்தவர். அவர் எழுதியுள்ளவற்றில் இரண்டு விஷ யங்கள் அவர் மறையும் வரையில் இருபது வருஷங்களுக்கு மேலாக P.B.A. ஸ்வாமி போல்வாரால் பலகால் எடுத்துக்காட்டப்பட்டு வந்தன. அவ் விரண்டு விஷயங்கள் எவை யென்றால்—

(1) ஸ்ரீராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து சூதுவகையில் ஸ்ரீரங்கம் கோவில் சாவிக்கொத்துகளைவாங்கி அதிகாரத்தையும் பறித்து நிர்ப்பந்தத்தாலேயே கோயிலையும் கோயிலைச் சேர்ந்தவர்களையும் பழைய நிலைமையில்நின்றும் மாற்றித் தென்கலைப் புண்ட்ரமாக்கிவிட்டார்களென்பது; இதிலிருந்து எவ்வளவோ தத்துவம் ஏற்பட்டுவிட்டதல்லவா? அந்த D. T. தாதாசாரியர் மறைந்துவிட்டாலும் அவருடைய அந்தச் சுவடிக்கு [ஸம்ப்ர தாய ப்ரதீபமென்னும் வடமொழிச்சுவடிக்கு]மதிப்புரை கொடுத்திருப்பவரான ஸ்ரீ உ. வே. மதுராந்தகம் வித்வான் வீரராகவாசாரியார் ஸ்வாமி ஸ்ரீரங்கத்தி லேயே குடிவாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர் இவ்விஷயத்தை அபலாபம் பண்ண முடியாதபடி யல்லவோ திகைத்து நிற்கிறார். அட்வகேட் இதைப் பத்தி அவரை நேரில் கேட்கவேணும். (கேட்டாரோ?)

(2) இரண்டாவதுவிஷய மென்னவென்றால்; தேசிகனை ஸ்ரீவேங்கடநாதார்ய ரென்கிற பெயரால் குறிப்பிட்டு "இவருடைய உக்தி (தத்வடீகா ஸூக்தி) மிகவும் அஸமஞ்ஜஸமாகவுள்ளது என்றெழுதப்பட்டுள்ளது. திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடுகளில் ஒன்றான ரூபகபரிசுத்தியென்னும் சுவடியில் இது பேர்க்கவும் பேராதபடி பிரளயத்திலும் அழியாதபடியுள்ளது. இதைப்பற்றியும் இருபது வருஷகாலம் பண்டித கோஷ்டிகளில் ஹாஹாகாரம் இருந்து வந்தது. இவ்விரண்டையும் ஏதேனுமொருவிதமாக மாற்றிக்கொள்ளும் என்று பல வடகலையார்கள் அவர்க்குப் பலகால் தெரிவித்துங்கூட அவர் ஜீவித்திருக்கும் வரையில் மாற்றிக்கொள்ளவில்லை. என் மனச்சாட்சியை நான் மறைக்கமுடியாதென்றும் சொல்லிவந்தார். கும்பகோணம் வித்வான் ஆராவமுதய்யங்கார் 1952ஆண்டில் வெளியிட்டிருக்கும் தேசிகபக்திதத்வமென்கிற நூலில் இதை விரிவாகவும் விளக்கமாகவும் காணலாம். வைதிகத்தில் அதிகமாகப் பரிசயமில்லாதவரான டாக்டர் ராமன் ஏதோ எழுதியிருக்கிறாரென்று பரிதபிக்கிற அட்வொகேட் இங்கு நாம் மேலே காட்டிய விஷயங்களுக்கல்லவோ பரிதபிக்கவேணும்"—என்று.

ஆக இவ்வளவும் ஸ்ரீரங்க ஸ்தலாசார்ய புருஷர் ஸமீபகாலத்தில் வெளியிட்ட தத்வார்த்த நிரூபணத்திலுள்ளது. ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியான நம் மதுராந்தகம் ஸ்வாமி ஸன்னிதியில் கடைசியாக விஜ்ஞாபிக்கிறேன். தத்வடீகையின் அஸாமஞ்ஜஸ்ய விஷயத்தைப்பற்றி தேவரீரைக் கேட்க நியாயமில்லை. அதில் தேவரீர் ஸம்பந்தப்படவில்லை யாதலால். ஆனாலும் நாம்ஒன்றுகேட்கலாம்-தேசிகதர்சநரத்நாகரபிருதபூஷிதராய் நியாய வேதாந்த கேஸரி தர்க்கரத்னமாய் விளங்குகின்ற தேவரீர் தேசிகபக்தர்கள் மனம்குழம்பும்படி D.T. தாதாசாரியர்எழுதியதேசிகஸூக்திதூஷணத்தைப் பரிஹரிக்க முன்வரவேண்டாமா? அது தேவரீருக்குக் கடமையன்றோ? நானும் பிறரும் பலகால் குத்திக்குத்திக் காட்டியும் வ்ருச்சிகதஷ்டமலிம்லுசவத் இருந்து காலங்கழித்து வருவது எதனாலே? என்று கேட்கலாம். அக்கேள்வியை விட்டிடுகிறேன். D.T தாதாசாரியர் ச்ராத்தப்ராஹ்மணார்த்தக் கதையொன்றையெழுதி அமுதனாரிடம் கோவில் கொத்துச்சாவியைச் சூதுவழியால்கைப்பற்றிக் கோயிலைத்தென்கலையாக்கி, கோயிலைச் சேர்ந்தவர்களை யெல்லாம் நிர்ப்பந்தத்தாலேயே தென்கலைத் திருமண்காப்பு அணியச் செய்ததாக எழுதி அச்சிட்ட ஸம்ப்ரதாயப்ரதீபச்சுவடியில் தேவரீருடைய அபிநந்தன பத்ரிகை அபலாபம் செய்ய முடியாதபடி விளங்குகின்றதே! இதற்கு என்ன விடை கூறுகின்றது? என்று மடிபிடித்துக் கேட்கிறேன்.

"இந்தப் பாவி அடுத்தடுத்து இங்ஙனே கேள்விகேட்டு உயிரை வாங்குகிறானே! எதையாவது பதிலாகச் சொல்லித் தொலைப்போம்" என்றாவது ஒன்று சொல்லித் தொலைக்கலாகாதா? "ஏதோ ப்ரமித்து எழுதிவிட்டோம்; கோயிலொழுகைத் தவறாக க்ரஹித்து எழுதி விட்டோம்" என்றாவது எழுதி இந்தச் சர்ச்சைக்கு முற்றுப் புள்ளியிட்டு விடலாமே. எதற்காக இதில் மௌனம்? மேல் எழுதுமவற்றைக் கவனித்தருளவேணும். கவனித்தருளிற்று என்பது உலகுக்குத் தெரியவேணும் விரைவில்.

அவரவர்கள் அணிந்து கொள்ளும் திருமண்காப்பு பற்றின விசாரம் விபலம் என்று விட்டிடுவோம். ஆங்காங்கு தேவாலயவ்யவஹாரங்களில் இந்தத் திருமண் விவாதம் முதன் முதலாக எந்தகாலத்தில் விளைந்தது? என்பதைக் கண்டறியவேணும். வேதத்தில்* தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந்* என்கிறவாக்கியம் எத்தனைதடவை ஓதப்படுகிறதென்று கேட்டால் ஆலோசித்துப் பார்த்துச் சொல்லிவிடலாம். அந்தப் பிணக்கு எப்போது தொடக்கமாயிற்றென்று கேட்டால் சொல்லவல்லாரில்லை, இந்தத் திருமண் பிணக்கு எப்போது ஏற்பட்டது? என்று வினவினுல் விடையிறுப்பது அரிதன்று. ஆழ்வார் திருவாய்மொழியில் *பரிவதிலீசன் பதிகத்தில் *பிணங்கியமரர் பிதற்றுங் குணங்கெழு கொள்கையினுனே* என்று ஸாதிக்கிற பிணக்கமும், தேசிகன் கோதாஸ்துதியில் *வாசாலயந்தி வஸுதே! ரஸிகாஸ் த்ரிலோகீம் ந்யூநாதிகத்வஸமதா விஷயைர் விவாதை:* என்று ஸாதிக்கிற விவாதமும், ஸ்ரீராமஸீதா விவாஹ காலத்தில் *நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும், (என்பார்) *கொம்பினைக் காணுந்தோறும் குரிசிற்கு மன்னதேயாம் (என்பார்) *என்று கம்பர் கூறுகின்ற பதக மொழியும் விரும்பி வரவேற்கத்தக்கவை, அடிக்கழஞ்சு பெறும். அந்தவிவாதங்களுண்டான காலத்தையும் ஒருவரு மறியார். தேவஸ்தானங்களில் புண்ட்ரவிவாத மூண்டான காலத்தை Madras High Court வக்கீல் களான (Late) கீனூர் C நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும், நம்முடைய பாக்கியத்தினுல் இற்றைக்கும் வாழ்ந்தருள்கின்ற ஸ்ரீமது பயவே. V. N. வெங்கடவரதாசார்யஸ்வாமியும் ஆங்கிலத்தில் எழுதிவைத்தே யிருக்கின்றுர்கள். அவற்றை நாமே அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேம். இவ்வூரிலும் ஸ்ரீஉவே. ஞான சீல வயோவ்ருத்தரான நல்லப்பா ஜீயப்பங்கார் ஸ்வாமியும் பாட மொப்பிப்பது போல் ஒப்பிப்பர். ஸமீபகாலத்தில் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டுமிருக்கிறுர்.

ஒருவரைக் கேட்டறிய வேண்டிய விஷயமு மன்றிது. எந்தெந்த திவ்யதேசங்களில் ஸன்னிதியினுள்ளே தேசிகன் எழுந்தருளியிருந்து குறையற திருவாராதன உத்ஸவாதிகளைஅநுபவித்தருளா நிற்கச்செய்தேயும் வெளிப்பட்ட நிலங்களிலேபுதிதாக தேசிகனுக்குக் கோவில் கட்டிக் குலாவத் தொடங்கினுர்களோ, அந்தந்த திவ்யதேசங்களுக்கு ஒரு ஜாபிதா எடுக்கவேணும். இந்தத் திருவிளையாடல் முந்துறமுன்னம் எந்ததிவ்யதேசத்தில் ஆரம்பமாயிற்று— என்பதையும் உள்ளபடியறியவேணும். அறியப்பெற்றுல் அதிலிருந்து பல மருமங்கள் எளிதிலுணரலாகும்.

இந்த நமது க்ரந்தம் ஸதநுஷ்டான தர்ப்பணக்ரந்தத்திற்குக் காப்பாகத் தோன்றுவதால், இதில் இந்த சர்ச்சைகள் எதற்காக வென்பதை மறுமுறையும் தெரிவிக்கிறேம். சிறுபுலியூர் ஸ்வாமியின் தர்ப்பணக்ரந்தத்தை ஆழ்ந்து நோக்கினுல், இக்காலத்தில் தேசிக பக்தர்களென்று சொல்லிக் கொள்ளுமவர்களுக்கு ஸ்வாமி தேசிகனேடு ஸம்பந்தம் அந்நாள் தொடங்கித் தொடர்ந்து வருவதன்று, கோவில் சண்டைகளுக்காக இடையில் ஏறிட்டுக் கொண்டதத்தனை—என்பது அந்த ஸ்வாமியின் அந்தரங்கமாகத் தெரியவருகின்றது. இந்த தர்ப்பணக்ரந்தத்திற்கு அந்த ஸ்வாமியின் மூத்ததிருக்குமாரர் (திருத்தகப்பனுரை அதிசயித்தஞானமுடையவர்) இயற்றியதர்ப்பண ஸாரபேடிகா என்கிற டிப்பணீரூபமான க்ரந்தத்தில் அது மிகமிகவிளக்கப்பட்டுள்ளது. நம்முடைய மதுராந்தக நண்பர் முதலைந்துப்ரதிபலனங்களைத்தொடாமல்விட்டிட்டதற்

குக் காரணம் அந்த விடங்கள் அவர் தம்முடைய மதிக்குச் சிறிதும் எட்டாமையே தான்; அது எப்படியாவது இருக்கட்டும்; மதுராந்தகம் நண்பருடைய ஆராய்ச்சிக்குச் சில விஷயங்களை விடுகிறேன். உபேக்ஷியாமல் ஆராய்ந்து விடையிறுக்கட்டும்.

பிள்ளைலோகாசார்யருடையவும் மணவாளமாமுனிகளுடையவும் ஸ்ரீஸூக்திகளுக்கு வியாக்கியானமாகவும் கவசமாகவும் அவதரித்துள்ள க்ரந்தங்கள் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் *தைலதாராவத்* என்று சொல்லும் ரீதியிலே அவிச்சிந்நபரம்பரையாக வந்துகொண்டிருக்கின்றன. தேசிகன் எண்ணிறந்த திவ்யக்ரந்தங்கள் அருளிச்செய்தவர். அவற்றுக்கு சோளஸிம்ஹபுரம் (சண்டமாருதம்) தொட்டயாசார்ய ஸ்வாமி ந்ருஸிம்ஹராஜாசார்ய ஸ்வாமிபோல்வாரான தென்கலை வித்வான்கள் வியாக்கியான மிட்டிருப்பது தவிர, புராதனரென்று சொல்லக்கூடிய ஒரு வடகலை வித்வானாவது ஒருக்ரந்தத்திற்காவது வியாக்கியான மிட்டிருப்பதுண்டோ? வியாக்கியானமிடவேண்டா; தேசிகன்திரு நாமத்தையும் ஸ்ரீஸூக்தியையுமுதாஹரித்து க்ரந்தமெழுதினவர் இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முற்பட்டவராக ஒருவடகலை வித்வானைக்காட்டமுடியுமோ? தேசிகனுக்குஸமகாலஸ்தரானவாதிகேஸரிஅழகியமணவாளச்சீயரும்(சிறிதுபிற்பட்ட) மணவாளமாமுனிகளும் தொடங்கித் தென்னாசார்யபரம்பரையில்ஸம்ஸ்க்ருதமணிப்ரவாள க்ரந்தமெழுதின தென்கலைவித்வான்கள் அநுஸ்யூதபரம்பரையாக வருவதை எந்த ஸபையிலும் எந்த ஸமயத்திலும் நிரூபிக்க முடியுமே. தேசிகரஹஸ்யங்களில் தலையான ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு முதன் முதலாக வியாக்கியான மிட்டவர் எந்த நூற்றாண்டிலிருந்தவர் தெரியுமோ? முநித்ரயஸம்பிரதாயத்திற் கென்று வியாக்கியான மெழுதிய திருவயிந்திரபுரத்தவரும், ஸந்நிதி (மடம்) ஸம்பிரதாயத்திற் கென்று வியாக்கியான மெழுதிய ஸ்ரீமத்பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர்ஸ்வாமியும் நங்கண்முகப்பே வாழ்ந்தவர்களே. மற்றும் ஸ்தோத்ராதிகளுக்கு வியாக்கியான மெழுதியவர்கள் அடியேனோடு கூடவே ஜீவித்திருக்கிறார்கள். ஸ்ரீஸாக்ஷாத்ஸ்வாமியென்பவரும் (உபநிஷத்பாஷ்ய காரரான) ரங்கராமாநுஜஸ்வாமியென்பவரும் எந்தநூற்றாண்டிலிருந்தவர்கள் தெரியுமோ? *யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ* ஆனாலும், ஸமயே ப்ராப்தே உண்மைகளை வெளியிடாமலிருக்க முடியுமோ? இப்போது புதிதாகவா இதையெல்லாம் நாமெழுதுகிறோம்? காலஞ்சென்ற டி.டி. தாததாசாரியர், ஏ.வி. கோபாலாசாரியர், சேட்லூர். நரஸிம்ஹாசாரியர், கீழச்சேரி ஸ்ரீநிவாஸாசாரியர், புத்தங்கோட்டம் ஸ்வாமிபோல்வார்களையும், அவரவர்களுக்காகத் தோன்றிய பலபலநூல்களையும் காணாதாருளரோ? அறியாதாருளரோ? ஒவ்வொன்றையும் புதுப்பிக்க ஒவ்வொரு மஹான் முன்வருகிறார்.

தேசிகன் திருவவதரித்து எழுநூறாண்டுகட்குமேல் ஆய்விட்டனவென்பதை உலகமறிந்தேயுள்ளது. அவருடைய திவ்ய ஸூக்திகள் முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னுமாக அவதரித்தவை; எண்ணிறந்தவை; யாதவாப்யுதய மஹாகாவ்யத்திற்கு நாராயணத்வேஷியான ஒருவரா வியாக்க்யாதாவாக அமையவேண்டும்? தேசிகபக்தம்மந்யர்கள் தேசிகனை இடையறாமல் அந்நாள் தொடங்கியே வழிபடுமவர்களாயிருந்தால் அவருடைய திருவவதாரஸ்தலம் இப்போதிருக்கிறபடி யிருந்திருக்

குமா? நீதிமன்றங்களில் வழக்குக்கள் தோன்ற அவகாசமிருந்திருக்குமா? அந்த காலத்தில் 1874ஆம் ஞூத்தில் வடகலை வகுப்பினர் முன்னிருந்ததிருமணை இடித்துத் தள்ளி வடகலைத்திருமண்போட்டார்களென்பது நியாயஸ்தானாதிகார்டுகளால் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. அதாவது இற்றைக்கு 103 வருஷங்களுக்கு முன் வரையில் தேசிகனுடைய அவதார ஸ்தலத்தில் தென்கலைத் திருமண்தான் திகழ்ந்த தென்பது நிஸ்ஸந்தேஹமான விஷயம். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதி யெதிரில் விளங்குகின்ற தேசிகன் ஸன்னிதி வாசலில் புராதனக்கட்டிடமான தென்கலைத்திருமண் நாளைக்கும் எப்படி பிரகாசிக்கின்றதோ இப்படியேதான் காஞ்சீபுரத்திலும் அவருடைய அவதாரஸ்தலத்தில் தென்கலைத்திருமணே பிரகாசித்துக்கொண்டிருந்தது கி.பி. 1874 ஆம் ஞூ வரையில். (மேற்செய்திகேண்மின். காஞ்சீபுரத்தில் மஹாவ்யாபகராகவும் ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவாகவும் எழுந்தருளியிருந்த திருப்புட்குழியப்பா ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான உ. வே ஸ்ரீகிருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி 1874–ஆம் வருஷத்தில்செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஒரு கிரிமினல் தாவாவில் பிரதிவாதியாக எழுந்தருளும்படி நேரிட்டது. விளக்கொளி தேசிகன் ஸன்னிதி முன்னணியில் இருந்த புராதான காரைக்கட்டிடமான தென்கலைத் திருமண் காப்பை ஷெ திருப்புட்குழி யப்பா ஸ்வாமியின் தூண்டுதலால் சில வடகலையார்கள் இடித்துவிட்டார் களென்று ஸப் கலெக்டர் மிஸ்டர் குருல்துரை முன்னிலையில் தொடுக்கப் பட்டிருந்த தாவாவில் ஷெ திருப்புட்குழி ஸ்வாமியும் ஒரு எதிரியாக இருந்தார். அந்த தாவாவின் நம்பர் 72. அதில் ஷெ திருப்புட்குழி ஸ்வாமி கொடுத்த வாக்குமூலம் அப்படியே அச்சாகி வெளிவந்திருக்கிறது. 19—8—1874ல் ஷெ ஸ்வாமி கொடுத்த அந்த ஸ்டேட்மெண்டில் விளங்குகின்ற வாசகங்கள்—

"விளக்கொளி தேசிகன் ஸன்னிதிவாசலில் தென்கலை திருமண்தான் இருந்தது .........6, 7 மாதத்திற்கு முன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதை யிடித்து விட்டதாகக் கேள்விப்பட்டேன்.........அந்த தேசிகன் ஸன்னிதியிலுங்கூடத் தென்கலையார்களே தென்கலை மந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறார்கள். அங்கு வடகலையார் வடகலை மந்திரம் சொல்லிவரக் காணேம்." ............:—என்பன.

இதனால் வேதாந்த தேசிகனுடைய அவதார ஸ்தலமும் புராதனமாகத் தென்கலையாயிருந்த தென்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். வடகலைத் திருமண் ப்ரவேசத்திற்கு ப்ரஸக்தியே யில்லாத திருவல்லிக்கேணி, திருவிந்தளூர்; ஸ்ரீபெரும்பூதூர் முதலான விடங்களில் நாளைக்கும் தேசிகன் தென்கலைத் திருமண்காப்புடனே திகழ்கின்றமை ப்ரஸித்த மாதலாலும், அதை ஸஹியாமலே இக்காலத்தவர்கள் நூதனமாக ஆங்காங்கு மூலை முடுக்குகளில் வேறு தேசிகன் ஸன்னிதிகளைக் கட்டுவித்து ஸ்வேச்சையாக ஏதோ செய்துகொண்டு வருகிறார்களென்பது அபரோக்ஷமானது.

காஞ்சீ புரத்தில் திருவவதாரஸ்தலமான விளக்கொளி ஸன்னிதியிலும் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் தேசிகனுடைய திவ்யமங்கள விக்ரஹம் இனிதாக விளங்கிக் கொண்டிருக்கச் சேய்தேயும் [மேற்ப்ரஸ்தாவித்த) திருப்புட்குடியப்பா ஸ்வாமி வேகவதிக்கரையில் ஒரு தேசிகன் ஸன்னிதியை நிர்மாணம் செய்வித் திருப்பது எதற்

காக? விளக்கொளி ஸன்னிதிவாசலிலும் தனியே ஒரு தேசிகவிக்ரஹஸ்தாபநம் பண்ணியிருப்பது எதற்காக? திருவரங்கம் பெரியகோயிலில் ஸன்னிதி யுள்ளே தேசிகன் விளங்கா நிற்க, வீதிக்கொரு தேசிகாலயம் கட்டிக்கூத்தாடுவது எதற்காக? என்று ஆலோசிக்கவல்லாரில்லையா? இதுவரை கட்டியிருப்பது போதாமல் இன்னமும் பாரிப்பிலிருக்கின்ற தேசிகாலயங்கள் எத்தனையோ? அந்தவகுப்பில் ஒருவர்க்கும் விவேக சக்தியை ஈச்வரன் கொடுத்திருக்கவில்லையா? கொடுத்ததை இவர்கள் பயன்படுத்திக் கொள்ளவில்லையா?

நமது மதுராந்தக நண்பர் தமது விஶோதனத்தில் (பக்கம் 17ல்) "அத்ர ஸ்வாமிந: பரகதஸ்வீகாரபலீபூதஸ்வகதஸ்வீகார......ஸ்வகதஸ்வீகாரபரகதஸ்வீகார நிரூபணம் க்ருதம் ஸ்ரீவசநபூஷணமீமாம்ஸா பாஷ்யே" இதி = என்பதாக தர்ப்பண ஸ்ரீஸூக்தியை அநுவதித்து *அயமேவ ஸாக்ஷாத் தேசிக ஸம்ப்ரதாய: *உபாயஸ்ஸ்வப்ராப்தேரித்யாதிஷு ஸ்பஷ்டீக்ருத:; ததிதம் ஸ்வகதஸ்வீகாரஸ்வரூபம் அபராம்ருச்ய........தூஷயதாம் சிரஸி காட: ப்ரஹார ஏஷ ஆதுநிகாநாம்" என்று நிகமித்திருக்கிறார். யார்? மதுராந்தக ஸுஹ்ருந்மணி. இந்த வெட்கக்கேட்டைக் கேண்மின். ஸ்ரீவசநபூஷணமீமாம்ஸா பாஷ்யத்தை யடியொற்றிச் சிறுபுலியூர் ஸ்வாமி செய்தருளியிருக்கிற நிரூபணமே தேசிகஸித்தாந்த மென்றும், உண்மையறியாமல் இதனை தூஷிக்கின்ற நவீனர்களின் மண்டைமேல் செம்மட்டியடி அடித்திருக்கிறார் சிறுபுலியூர் ஸ்வாமியென்றும் நாணமில்லாதெழுதியுள்ளார். இங்கு உண்மை கேண்மின். இவர்க்கும் நமக்கும் எத்தனை வாதவிவாதங்கள் நடந்திருக்கின்றன தெரியுமோ? கீதையில் (அத் 4ல்) *தாந்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப!* என்றுப்போலன்றிக்கே *தாந்யஹம் நைவ ஜாநாமி ஸோயமேவாவகச்சதி* (அல்லது) *பவாநேவாவகச்சதி* என்னவேண்டும்படி இவர்தம்முடைய நினைவில் தவறுதிருக்கும். இவரது திருமாளிகையில் கோயிலாழ்வாரைத் திறந்தால் அந்த நூல்கள் ஒன்று விடாமல் காட்சிதரும். பரீக்ஷித்துப் பார்க்கலாம். சிறுபுலியூர்ஸ்வாமி இவர்தம்முடைய திருமுடியில் செம்மட்டியடி அடித்திருக்கிறாரென்பதை இப்படி மாற்றி யெழுதியுள்ளார். இந்த நமது நண்பர் "அயமேவ ஸாக்ஷாத் தேசிக ஸம்ப்ரதாய:; உபாயஸ் ஸ்வப்ராப்தேரித்யாதிஷுஸ்பஷ்டீக்ருத:" இத்யாதியெழுதியிருக்கிறரே; இங்குக்கேண்மின்; இவர்க்கும் இவரைச்சேர்ந்தவர்களுக்கும் முதன்முதலாக *உபாய: ஸ்வப்ராப்தே: உபநிஷததீதஸ் ஸ பகவாந் ப்ரஸத்த்யை தஸ்யோக்தே ப்ரபதந நிதித்யாஸந கதீ; ததாரோஹ: பும்ஸ: (ஸாம்) ஸுக்ருதபரிபாகேந மஹதா நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்கிற [ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரஸ்த] தேசிக திவ்யஸூக்தியை யெடுத்துக் காட்டினவன் அடியேன். "இவர்களுக்குத் தெரியாததையா நீர் எடுத்துக் காட்டினீர்?" என்று கேட்பீர்கள்; தாராளமாகக் கேளுங்கள்; (இதை உற்றுக் கேளுங்கள்.) அடியேன் வடமொழியிலும் ஹிந்தியிலும் தென்மொழியிலும் தெலுங்கிலும் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தவிஶதீகரணபரமாக எழுதி அச்சிட்டுள்ள பல நூல்களில் ஆதிஶங்கராசார்யருடைய ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம், கீதாபாஷ்யம், விஷ்ணுஸஹஸ்ர நாமபாஷ்யம் ஆகிய இவற்றிலிருந்து பலபல வாக்யங்களை எடுத்துக் காட்டியிருக்கிறேன்; அவை இக்காலத்து அத்வைதிகளுக்குத் தெரியாதவையென்று நான் நினைத்திருக்கிறேன். தெரிந்தும் அவர்கள் அவற்றில் அத்ருஷ்டியை அபிநயிக்கிறார்களென்று

கொண்டு எடுத்துக்காட்டுகிறபடி. அப்படியே தேசிக திவ்யக்ரந்தங்களிலுள்ள (நாமெடுத்துக் காட்டும்) ஸ்ரீஸூக்திகளை தேசிக பக்தம்மந்யர்கள் அறியாமலிருக்கிறார்கள் என்றெண்ணியா நாம் எடுத்துக் காட்டுவது? இங்ஙனே கனவிலுமெண்ணோம். ஸ்தோத்ரக்ரந்தங்களோடு தத்வார்த்த நிரூபணைகதத்பர க்ரந்தங்களோடு வாசியற தேசிகனருளிய திவ்யக்ரந்தங்களிலுள்ள ஸ்ரீஸூக்திகளை அவர்கள் நிஷ்பக்ஷபாதர்களாய், அபிநிவேஶவசீக்ருத சேதஸ்கர்களல்லாதாராய்க் குறிக்கொள்வர்களாகில் வாத விவாதக்ரந்தங்கள் வளர அணுமாத்ரமும் அவகாஶமிராதென்று சபதம் செய்வேன்.

*த்ராணே ஸ்வாமித்வமௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:. ப்ரதாந ஹேது: ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணா விபோ:* என்கிற ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார காரிகையையும், *கிம் வா கரிஶ! க்ருபணே மயி ரக்ஷணீயே தர்மாதிபாஹ்யஸஹகாரிகவேஷணேந?, நந்வஸ்தி விச்வபரிபாலந ஜாகருக: ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ்ஸஹாய:* என்கிற ஸ்ரீவரதராஜபஞ்சாஶத்பத்யத்தையும்(மட்டும்)ப்ரமாணமாகக்கொண்டார்களாகில் க்ருபா நிர்ஹேதுகத்வவாதிகளைப் பழிப்பர்களோ? கப்சிப்; வாயைத்திறவார்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்திலுள்ள "*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்குமாகையால் இவன் தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நேரதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்க மாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக்கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணாந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று... 'என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவு மவனதின்னருளேயென்றும் *இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாயபூதனை அவன் செய்விக்கச்செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாகவெண்ணுகை உசிதமன்றென்று (ஏக) சப்தத்துக்கு தாத்பர்யம்" என்கிற (ஸமஸ்த கல்மஷாபஹ ஸ்ரீஸூக்திச்ரேணியை அவமதியாதே மதித்தார்களாகில். ஸ்ரீ வசநபூஷணார்த்த மொன்றிலாவது விதண்டாவாதம் செய்வர்களோ? ஸாஹித்யஸாகரத்தில் ஒரு அத்புதமான சுலோகம்-(அநுவாது)

"க்வாகார்யம் சசலக்ஷ்மண: க்வ நு குலம்—பூயோபி த்ருச்யேத ஸா
கிம் வக்ஷ்யந்த்யபகல்மஷா: க்ருததிய:—கோபேபி காந்தம் முகம்;
தோஷாணாம் ப்ரஶமாய ந: ச்ருதமஹோ—ஸ்வப்நேபி ஸா துர்லபா
சேத:! ஸ்வாஸ்த்யமுபேஹி—க: கலு யுவா தந்யோதரம்(தா) பாஸ்யதி"

என்கிற சுலோகம் குவலயானந்தம் முதலியவற்றில் வாசித்ததுண்டு; இவர்களாதரிக்கும் ஸூக்திகளில் அதே ரீதியைக் காணலாமென்றுரொருவர். ஸப்ததியில் "சலசித்த வ்ருத்தி விநிவர்த்தநௌஷதம்" என்று ஸாதித்த ஔஷதம் ஸம்பாதிக்கவேணும்.

"கலக்கமும் தெளிவும் கலசாதே என்றுமொருபடிப்பட்ட நிலையிலே நின்று அருளிச்செய்யுமாசாரியர்கள் ப்ரபத்தியைப்பற்றி "அதிகாரி விசேஷணம்- ஸம்பந்தஜ்ஞானமாத்ரம்- ஸித்தோபாயப்ரதிபத்திமாத்ரம்- அநிவாரண மாத்ரம்- சைதந்யகார்யம்—சித்தஸமாதாநார்த்தம்" என்றெழுதியிருப்பதைக்கண்ட ஸ்வாமிதேசிகன் "அது சேராது, இதுபொருந்தாது, அதுஇணங்காது, கூழும்கோந்தும் தடவினாலுங்கூட இது" ஒட்டாது. அதிகாரிவிசேஷணத்துக்குச் சொல்லுகிற லக்ஷணத்திற்குச் சேராது, என்றிப்படியெல்லாம் சரமாரி பொழிந்துவிட்டு ரஹஸ்யத்ரயஸாரத்தின் ஸாரமென்று பொருள்கொண்ட ஸாரஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்திலே "இப்படி விதேயமான ப்ரபதனத்தைச் சிலர் அதிகாரி விசேஷணம் ஸம்பந்தஜ்ஞானமாத்ரம் அநிவாரணமாத்ரம் அநுமதிமாத்ரம் அசித்வ்யாவ்ருத்திமாத்ரம் சைதந்யக்ருத்யம் சித்தஸமாதாநார்த்தம் என்றுப்போலே சொல்லுமதுவும்—இவ்விதிக்கும் இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும் இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும் பாஷ்யகத்யாதிகளுக்கும் அநுகுணமாகவேண்டுகையாலே—*நானே நானாவித நரகம்புகும் பாவஞ்செய்தேனென்று நிற்கிற நம்மை ஈச்வரன் ரக்ஷிக்கிறவிடத்தில் வந்தடைந்தேனென்று நாம் பண்ணுகிற அல்பமான வசீகரணயத்னம் அதுவுமவனதின்னருளே — இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழிருத்துமம்மானே! இத்யாதிகளிற்படியே அவன்தானேகாட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோவென்று ஸித்தோபாயப்ராதாந்யாநுஸந்தானத்தில் அவர்களுக்கு தாத்பர்யம்" என்றெழுதிவைத்தார். இந்த வாக்யராசியில் "அநுகுணமாகவேண்டுகையாலே" என்றெழுதியிருப்பதை உற்றுநோக்கவேணும். அநுகுணமன்று என்று கண்டித்துத் தொலைத்த விஷயமன்றோவது; அதை (அநுகுணமாக வேண்டுகையாலே) என்று இங்கே ஸாதிப்பது எதனால்?

(இதன் தொடர்ச்சியை சில பக்கங்கள் தள்ளிப்பார்க்கவேணும்)

இந்தத் தமிழ் நூலுக்கு முன்னே இதே விஷயமாக நாம் வடமொழியிலெழுதிய **ஸதநுஷ்டாந தர்ப்பண ரக்ஷணம்** என்கிற நூலில் முகப்பே எழுதியுள்ள சுலோகம் கேளீர்.

**(ச்லோகம்)**

நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தே யதிபதிக்ருதிபீ ரக்ஷிதே கூரநாத-
த்ரய்யந்தாசார்யவர்யாத்யமிதக்ருதிகணை: போஷிதே தர்மஸேதௌ ந:,
பாஹ்யைரந்தர்நிவிஷ்டைரபி ச குமதிபிர் தூஷணம் யத்யதுச்யே-
தைதத் ஸர்வஞ்ச ஸத்யோ நிரஸிதுமவநௌ தேசிகை:ப்ரேஷிதோஹம்:

## ஸ்ரீ வைஷ்ணவவுலகம் இதைக் குறிக்கொள்ளவேணும்

மேலே குறிப்பிட்ட சுலோகத்தின்படி நாம் செய்துவரும் தொண்டுகளில், எம்பெருமானார் தரிசனத்தின் இருகண்களான விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கும் தென்னாசார்ய ஸித்தாந்தத்திற்கும் ஸமரூபமாகவே தொண்டு செய்துவருவதைக்

கண்டிருக்கிறீர்கள் விசிஷ்டாத்வைதத் தொண்டான நூல்களில் ஆதிஶங்கராசாரிய ருடைய உக்திகளை [ஸ்ரீமந்நாராயண பாரம்யாதி விஷயமான பாஷிதங்களை] எடுத்துக் காட்டிவருகிறோம். தென்னாசார்ய ஸித்தாந்தத் தொண்டான நூல்களில் ஸ்ரீமந்நிக மாந்த மஹாதேசிக திவ்யஸூக்திகளைப் பெரும்பாலுமெடுத்துக்காட்டி வருகிறோம். இவற்றை அவரவர்கள் தாமாகக் காணுமலிருக்கிறார்களென்பது நமது கருத்தல்ல. *அபிநிவேஶவசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:* என்று ஆளவந்தா ரருளிச் செய்த கணக்கிலே (அவரவர்கள்) கண்டுவைத்தும், அவையவை ஸ்வமத விப்ரதீபங்களென்று அவர்கள்தாம் அறிந்து வைத்தும் ரூடமூலமான (மருந்தில்லாத) பிடிவாதத்தினால் உள்ளபடி க்ரஹிப்பதில்லை யென்றும், எந்த மதத்திலும் விவேகிக ளென்றும் நிஷ்பக்ஷபாதர்களென்றும் சிலருண்டாகையாலே அன்னவர்கள் கண்டு உகக்கட்டுமென்றுமெண்ணியே அவரவர்கள் மதிக்கக்கூடிய பெரியார்களின் திரு வாக்குக்களை நாம் எடுத்துக்காட்டுவது. விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத் துறையில் நாம் காட்டும் பகவத்பாத ஆதிஶங்கராசார்ய ஸூக்திகளில் சிலவற்றையும் [ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்ய—கீதாபாஷ்ய—ஸஹஸ்ரநாமபாஷ்யங்களிலிருந்து] ஸ்தாலீபுலாகந்யா யேந எடுத்துக்காட்டுகிறோமிங்கு. அப்படியே தென்னாசார்ய ஸித்தாந்தத் துறையிலும் பலகால் நாமெடுத்துக்காட்டிய தேசிக திவ்ய ஸூக்திகளில் சிறுபான்மை யெடுத்துக் காட்டுகிறோம். ஶங்கராசார்ய பரம்பரையினர்க்கு நாராயணத்வேஷம் (அல்லது) தேவதாந்தரப்ராவண்யம் நலமன்று என்று விளக்க, நாராயணபாரம்யபரமான அவ ருடைய உக்திகளை யெடுத்துக் காட்டுகிறோம். ஸம்ப்ரதாய ரஹஸ்ய ஸரணியில் மதுராந்தக மித்ரமணிபோல்வார் பலருண்டிருக்கும் விஷயங்களில் தெளிவு பிறப்பிக்கக் கூடிய ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகளில் ஏகதேஶம் எடுத்துக் காட்டிவருகிறோம். இது இன்று நேற்றன்று. காட்டுவது பயன்படவில்லையே! என்றுதான் நிர்வேதம். •

## —ஆதிசங்கராசார்யருடைய மூன்று பாஷ்யங்களிலிருந்து—

பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில், *உத்பத்த்யஸம்பவாத்* என் கிற ஸூத்ர பாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத் ராகமப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி, மூன்றாவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார் பகவத்பாதர். தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை;—(இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்) "தத்ர யத் தாவதுச்யதே யோஸௌ நாராயண: பரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ர மநந்யசித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதிஸ்ம்ருத்யோ ரீச்வரப்ரணிதாநஸ்யப்ரஸித்தத்வாத்"என்பன அவருடைய ஸூத்ரபாஷ்ய பங்க்திகள். இவற்றால், ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்யப்ரதிஷ்டாபநத்தில் பகவத்பாதர் ஊக்க முடையவரென்பது விளங்கிற்று. ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களுள்ள விடங்களில் விஷ்ணுவாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங்களையிட்டு வியாக்கியானம் செய்யத் தொடங்கினவரும் பகவத் பாதரேயாவர். மேலேயெடுத்துக்காட்டின *உத்பத்த்யஸம்ப வாதிகரண பாஷ்ய பங்க்தியில் "பகவதோ நாராயணஸ்ய அபிகமநாதிலக்ஷணமாராத

நமஜஸ்ரம்'' என்றவிடத்தில் [அநந்யசித்ததயா]'' என்றெழுதப்பட்டுள்ளதில் விசேஷித்துக் கண்செலுத்தவேணும். ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தைவைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணுராதநம் அநந்யசித்தக்ருத்யமாகுமா? நாராயணனைப் பரிவாரத்தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இது அநந்யசித்தத்வத்திற்கு விரோதமாகுமோ! என்று சிலர் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத்தில் ஸ்ரீமந் நாராயணபரிவாரத்வ ப்ரதிபத்தி குறையற்றதாகில் குசலமேயாகுமிவர்களுக்கு. இப்படி நாம் எத்தனை யிடங்களில் எடுத்துக்காட்டி யிருக்கிறோம். கண்டும் தெளியகில்லார். யாரைப்போல்? நமது நண்பர் வகுப்பினரைப்போல்.

சங்கர பகவத்பாதர் விஷ்ணு பக்தரா ? சிவபக்தரா? என்று விசாரித்து நிர்ணயிக்கவேண்டுவது அவசியமானது. ச்ருதீதிஹாஸ புராணுதி ஸமஸ்த ப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்றதென்பதில் யார்க்கும் விவாதமிராது. எம்பெருமான்தானே சோதிவாய் திறந்து பணித்ததென்கிற மிக்க சிறப்பன்றோ இதற்குள்ளது. அப்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே யென்றும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவே யென்றும் இதில் ஸகல வைதிகர்களும் ஏககண்டர்களே யாவர். இதில் விப்ரதிபத்தி கொண்ட வைதிகர் ஒருவருமிலர். இத்தகைய நூலில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங்களின் அவரத்வமும் அடிக்கடி விளக்கப்பட்டுள்ளது (10-8) *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே* என்றவிடத்தில்சங்கரபாஷ்யபங்க்தி இது கணீர்;—*அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம். ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ: —உத்பத்தி:; மத்த ஏவ ஸ்திதிநாசக்ரியாபலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே இத்யாதி. மூலத்தில் நாராயணபதமோ விஷ்ணுபதமோ காணப்படாத விடங்களிலெல்லாம் நியமேந விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டே பாஷ்யமியற்றுகிறுர் பகவத்பாதரென்பது வ்யபிசரியாத விஷயம் (9 22) ''அநந்யாச் சிந்தயந்தோ மாம்'' என்ற விடத்தில் ''பரம் தேவம் நாராயணம் பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்த தர்சிநாம்'' என்று பாஷ்யமிட்டிருக்கின்ற பகவத்பாதர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மையறிவாளிகள் என்று காட்டினுராகிறுர். ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாதத்தை ஸஹிப்பவரல்லர் பகவத்பாதர்; ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) ''காமை ஸ்தை ஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்ய தேவதா:* என்று தொடங்கிச் சொல்லி வருகையில் ''அந்தவத்து பலம் தேஷாம் தத் பவத்யல்பமேதஸாம்* என்று தலைக்கட்டப் பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் பகவத்பாதர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்கியமிது காணீர்: ''ஏவம் ஸமாநேபி ஆயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே! இத்யநுக்ரோசம் தர்சயதி பகவாந்* என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜிப்பவர்களுக்கே அநந்தாக்ஷய பலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந்தவர்களுங்கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தர பஜனம் செய்கிறுர்களே!

என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுது கதறுவதாக ஸாக்ஷாத் கரித்தன்றே பகவத்பாதர் இதை யெழுதியுள்ளார். இதை நாம் எத்தனை தடவை யெழுதி யுள்ளோம்! தெரியுமோ? மதுராந்தகநண்பர்க்கு எழுதுமவைபோலவே சிறிதும்பயன் படவில்லையே!

அதிலேயே பதினோராமத்யாயத்தில் விச்வரூபக் காட்சி என்பது அமைந்திருப்பதானது தேவதாந்தரங்களின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவதற்கேயன்றே. அதில் மூன்றாவது ச்லோகத்தில்:—''பகவானே! நீயே பரமேச்வரனென்பது உண்மையே; அதைக் கட்கூடாகக் காண விரும்புமெனக்கு உன்னால் வைஷ்ணவரூபத்தைக் காட்டிக் கொடுக்க முடியுமா? என்று அர்ஜுனன் தனது கருத்தை ஸூசிப்பித்தவளவில் ''பச்யாதித்யாந்வஸூந் ருத்ராநச்விநௌ மருதஸ் ததா'' என்று தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தினேகதேசத்தி லொடுங்கியிருந்த ஸமஸ்த தேவர்களையும் காணுமாறு காட்டிக் கொடுத்தருளினன் ஸ்ரீமந் நாராயணன்; பிறகு அவனருளிய திவ்யசக்ஷுஸ்ஸாலே கண்ட அர்ஜுனன் ''பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே'' என்று தொடங்கி ப்ரஹ்ம ருத்ராதி ஸகல தேவதா கணங்களையும் அத்திருமேனியில் காண்பதாகப் பேசினன் இதை இந்திரஜால மென்று சொல்லாமையினாலே அத்வைதவாதம் அடியறுப்புண்டது. தேவதாந்தர பாரம்ய வாதமோ நெடுந்தூரத்தில் தள்ளப்பட்டொழிந்தது நாராயணனில் வேறுபட்டதொரு தேவதை இங்ஙனே விச்வரூபம் காட்டித் தன் பக்கலில் நாராயணன் நிலீநனாயிருக்கும்படியைக் காட்டிற்றுண்டோ? காட்டத்தான் முடியுமோ? ''ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா விச்வேச்விநௌ மருதச்சோஷ்மபாச்ச, கந்தர்வ யக்ஷா ஸுர ஸித்தஸங்கா வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே" என்னுமிந்த ச்லோகமானது விசேஷித்து ருத்ராதிகளின் அவரத்வத்தைஅறுதியிடா நின்றதாயிற்று;இதையும் நாம் பலதடவை எழுதியுள்ளோம் இவற்றை இங்கே நாம் எடுத்துக்காட்டுவது எதற்காக? அவர்களுக்குக் காட்டுவதும் இவர்களுக்குக் காட்டுவதும் பழுதேயென்று நிரூபிக்கவே.

பகவத்பாதர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் பல பல இதிஹாஸங்களை எடுத்துக் காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணுவின் தாழ்வையோ தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும் அவர் காட்டினதில்லை. கேசவநாம பாஷ்யத்தில் ''கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத ஈசோஹம் ஸர்வதேஹிநாம். ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்' என்று சொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்ததாக ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத் பாதர். [அர்க்க:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் ''ப்ரஹ்மாதிபி பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க:''—என்று விவரணம் காட்டினர். [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் ''ஸம்ஹாரஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:'' என்று விவரித்தார்பகவத்பாதர். சிவபெருமான் விச்வ பஹிர்ப்பூதனல்லனே. *அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற ஸூத்திரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன ப்ரஸக்தியில்லையே உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வனென்பது பகவத்பாத ஸித்தாந்தம். *ஸர்வவாகீச்வரேச்வர:* என்கிற நாம பாஷ்யத்திலும் *ஸர்வேஷாம் வாகீச்வராணாம் ப்ரஹ்மாதீ.

நாமபி ஈச்வர:* என்றார் அவர்தாமே. இப்படிப்பட்ட ஆதிசங்கராசார்ய ஸூக்திகளை நாம் பலதடவை யெடுத்துக்காட்டியிருந்தும் பயனில்லையே அதேபோல் தேசிக திவ்ய ஸூக்திகளை எத்தனை தடவை யெடுதுக் காட்டினாலும் அந்தோ! பயனில்லையே!.

அடியேன் வாதம்பண்ணி வெற்றிபெறவேணுமென்கிற எண்ணங்கொண்டு இதையெல்லாம் எழுதுகிறவனல்லேன். தத்துவமுணரவேண்டி, ஆசார்ய ஸந்நிதானத்திலே சிஷ்யன் கேட்பதுபோல் கேட்கிறேன்—என்று பலகாலும் எழுதியிருக்கிறேன். நம் மதுராந்தகம் ஸ்வாமி இடையிடையே ப்ரேமபரீவாஹரூபமான ஸ்ரீமுகங்கள் பிரஸாதிக்கிறார். அதில் உபாலம்பமும் ப்ரதிபந்தியுமே காண்கிறது. *ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி* என்ற தலைக்கட்டி, எல்லாவற்றுக்கும் ஸமாதானகிறந்தமெழுதிவிட்டதுபோல் களிக்கிறார். "தேவரீரை ஸுகமாராத்யரென்று நினைத்தே அடியேள் எழுதுகிறேன்" என்று பதிலெழுதினால் அவர்க்குப் பரமானந்தமுண்டாகிறது. ஸுகமாராத்யதை தம்மிடத்திலுள்ளதென்று திருவுள்ளமுகக்கிறார்.

இங்ஙனே ப்ரஸக்தாநு ப்ரஸக்தமாகத் தொடர்ந்து வளர்ந்து செல்லக்கூடிய விஷயங்கள் *பன்னியுரைக்குங்கால் பாரதமாம். ஸ்வகதஸ்வீகார பாகத ஸ்வீகாரங்களில் ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தை அவலம்பித்துச் சிறுபுலியூர் ஸ்வாமி விவரித்தருளின ஸித்தாந்தமே தேசிக ஸித்தாந்தமும் தம்முடைய ஸித்தாந்தமும் என்றெழுதி, இவ்விஷயத்தில் *உபாயஸ் ஸ்வப்ராப்தேருப நிஷததீதஸ் ஸ பகவாந்* இத்யாதியான ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரபத்யத்தை நமது நண்பர் எடுத்துக் காட்டியிருக்கிறார். இதை நினைக்கும் போதெல்லாம் *விலவறச்சிரித்திட்டேனே* என்று திருமாலையில் ஸாதிக்கிறபடிதான் சிரித்துக் கொள்ளுகிறேன். நண்பர்க்கு இதுவும் ஒரு சாதுர்யமே; யாவச்சக்யம் வஞ்சிக்கப் பார்க்கிறார் பாவம்! வஞ்சனைக்கு மயங்கக் கூடியவர்களும் சிலருளரன்றோ? இதைப் பற்றித் தெரிவிக்க வேண்டியதை விளக்கமாகத் தெரிவிக்கிறோம். ஸத்ஸம்ப்ரதாயார்த்த விவரண பரமாக நாம் எழுதி வெளியிட்டுள்ள நூல்களில்* உபாயஸ் ஸ்வப்ராப்தே ரித்யாதியான இந்த தேசிக திவ்ய ஸூக்தியைப் பூர்த்தியாக விவரணம் செய்யப் பெறாத நூல் தேடிப் பிடிக்கவேணும் வருந்தித் தேடினாலும் கிடைக்காது. இவர்களுடைய கொள்கைக்குக் கால கூடமானது இந்த தேசிக ஸூக்தி. "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்கிற பிள்ளை லோகாசார்யருடைய திவ்யஸூக்தியைச் சிரமேற் கொண்டன்றோ தேசிகன் இந்த ச்லோகத்தை அருளிச்செய்தது. *குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:* என்பது மொரு தேசிகதிவ்ய ஸூக்தி (இது இன்னவிடத்திலிருக்கிற தென்று கூட இவர்களுக்குத் தெரியாது.) இதில் குணமென்றதில் முதலக்ஷரம் கவர்க்க சதுர்த்தம், புழு என்பது பொருள். பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளில் "புழு குறித்தது எழுத்தாமாப்போலே" என்பது ஒரு அபூர்வமான திருவாக்கு. தேசிகன் இதை மிகவும் ரஸித்து *குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: ந: பாதி* என்றருளிச் செய்தார். இதுவும் இவர்களுடைய கொள்கைக்குக் கால கூடமானது; விவரிக்கவேணுமோ இதை? இத்தகைய ஸ்ரீஸூக்திகளுக்குச் சிகரமானது *ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்.* என்கிற ந்யாஸதசகச்லோகரத்நம். "ஸாத்

விகத்யாகம் பண்ணவேண்டிய முறை அது'' என்று சொல்லியுமெழுதியும் கண்ணைத் துடைத்துக் கொள்ளுகிருர்கள். சிறுபயல்கள் ''உளுஉளாகுட்டிக்குச் சொன்னேன்'' என்று ஒரு விநோதப் பேச்சு பேசுவதுண்டு; *பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத்* என்கிற உபநிஷதுபதேசத்தைப் பரிபாலிக்கிறபடிபோலும். *அநாவிஷ்காரோ ந்வயாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரத்திற்கு யதார்த்தமான அர்த்தத்தை ஆவிஷ்கரியாமல் பொய்யான அர்த்தத்தையே பகர்ந்துகொண்டிருக்கவேணுமென்பது கருத்துப்போலும். *ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வயம் ந்யஸ்யதி* என்றது யதார்த்தகீர்த்தனமன்ருகில் *இசைவித்தென்னை யுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே* என்பது முதலான ஆழ்வார் பாசுரங்களைக் காட்டி ஸ்வாமி தேசிகன் சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் பண்ணினதற்குப் பொருளொன்றுமில்லையென்றும். நாமொரு தேசிக ஸூக்தியைக் காட்டினுல், அதற்குக் கண்டனம் அவருடைய மற்றொரு ஸ்ரீஸூக்தியைக் கொண்டே பண்ணுமவர் நமது மதுராந்தக நண்பர்.

**—ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகார ஸூக்தி—**

''இப்படி ஸித்தோபாயத்தைப்பற்ற ஸாத்யோபாயம் வ்யாஜமாத்ரமாய் இது ப்ரதாநமன்றிக்கே நிற்கிற நிலையைப்பற்ற ஸம்பந்தஜ்ஞானமாத்ரம், ஸித்தோபாய ப்ரதிபத்திமாத்ரம், அநிவாரணமாத்ரம், அநுமதிமாத்ரம், அசித்வ்யாவ்ருத்திமாத்ரம், சைதந்யக்ருத்யம், சித்தஸமாதானம், அதிகாரிவிசேஷணம் என்றிப்புடைகளிலே அதிவாதம் பண்ணினுர்கள். இவ் வந்யபரோக்தியைக் கொண்டு இவை தானே அர்த்தமென்று அறுதியிடவொண்ணுது; இவை யெல்லாம் *சரணம் வ்ரஜ* என்கிறவிதிக்கு விருத்தங்களாம்''

*அந்யபரோக்தி யாருடையதோ? அந்யமாக விவக்ஷிக்கப்படுவது எதுவோ?

**—கீழே பக்கத்தில் காட்டின ஸாரஸாரஸூக்தி—**

ஸாரஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்திலே ''இப்படி விதேயமான ப்ரபதனத்தைச் சிலர் அதிகாரி விசேஷணம்...என்றுப்போலே சொல்லுமதுவும்—இவ்விதிக்கும் இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும் இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும் பாஷ்யகத்யாதிகளுக்கும் அநுகுணமாக வேண்டுகையாலே — *நானே நானுவித நரகம்புகும் பாவாஞ்செய்தேனென்று நிற்கிற நம்மை ஈச்வரன் ரக்ஷிக்கிறவிடத்தில் வந்தடைந்தேனென்று நாம் பண்ணுகிற அல்பமான வசீகரண யத்னம் அதுவுமவனதின்னருளே—இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே! இத்யாதிகளிற்படியே அவன் தானேகாட்டி ப்ரவர்த்திப்பித்த தொரு வ்யாஜமாத்ரமன்ருே வென்று ஸித்தோபாயப்ராதாந்யாநு ஸந்தானத்தில் அவர்களுக்குதாத்பர்யம்'' என்றெழுதிவைத்தார்.

தேசிகரஹஸ்யங்கள் ஒன்றில் ''விசுத்த தேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்க்யத'' என்றும், பகவத்த்யான ஸோபானத்தில்—''ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத்ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந'' என்றும், முநிவாஹந போகத்தில் ''நாண் பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே'' என்றுமருளிச் செய்துள்ளவற்றை ஒன்று சேர்த்துப் பரிசீலனைபண்ணிப்

பரமார்த்தத்தைத் தேர்ந்துணரவல்ல ஆற்றல் நமது நண்பர்க்கு இல்லையா? ஏனில்லை? பரிபூர்த்தியாக இருக்கிறது. இருந்து பயனில்லையே. சததூஷணியில் அலேபகபங்கவாதத்தில்—"நநு பவந்தோபி அந்த்யஜபர்யந்தாந்..." இத்யாதியாலே ஒரு சோத்யம் கிளப்பப்பட்டது. இதைக்கிளப்பாதிருக்கலாம்; கிளப்பினாலும் *கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம்குலாதிகம்* என்கிற (அந்யத்ர தாமே காட்டியுள்ள) வசனத்தை யெழுதிக் கைகூப்பியிருக்கலாம். *ஸ்த்ரீ தர்மிண்யாம் ஆத்மஜநந்யாமிவ, என்றொரு விலக்ஷணத்ருஷ்டாந்தம் காட்டப் பட்டது. தாயாயிருந்தாலும் அவள் ரஜஸ்வலையா யிருக்கும் போது எப்படி ஒதுக்கப்பட வேண்டியவளோ, அப்படியே விபவகாலத்தில்...என்று ஸ்வ மதஸ்தாபனம் பண்ணி யாயிற்று. இதனால், நம்மாழ்வாரை மதுரகவி ப்ரப்நதிகளும், திருப்பாணாழ்வாரைலோக ஸாரங்காதிகளும் அணுகாமலே யிருந்தார்களென்பது ஸ்வாமியின் திருவுள்ளமாய்க் கிடந்தது. அமலனாதி பிரான் தனியன்களில் *மநவை முநிவாஹநம் தம், என்றதிலும் * முனியேறித் தனிபுகுந்து* என்றதிலும் ஸ்வாமிக்குப் பரிபூர்ணவிப்ரதிபத்தியே யிருந் ததென்னு மிடம் நிஸ்ஸம்சயவிபர்யயம். இந்தக் கலக்கம் தீர்ந்தபடியை விளக்குவன மேலே காட்டின மூன்று திவ்யஸூக்திகள். அவற்றில் தலையானது *நாண்பெரியோ மல்லோல் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பாருள்ரென்று நாடுவோமே* என்கிற முநி வாஹந போகப்பாசுரம். அமலனாதிபிரான் வியாக்கியானத்திற்கு இங்ஙனே ஒரு விலக்ஷணதிருநாமம் சாற்றினதன் சுவையை அறியகில்லாதார் தேசிக திவ்யஸூக்தி ரஸிகர்களாவர்களோ? எங்ஙனமாவர்கள்? *நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடினதை இந்த நூலில்தானா எழுதிவைக்கவேணும். *நம்பாணநாதன்* என்றதன் சுவையை யெடுத்துரைத்தவர் இதன் சுவையையும் எடுத்துரைக்க வேண்டாவோ? இது தானே மிகவும் முக்கியம். பாண்பெருமாள் விஷயத்திலே நன்மை தீமைகளில் தமக்குத் தெளிவின்றியே கலக்கமாக இருந்ததென்பது இந்தப் பாசுரத்தில் கையிலங்கு நெல்லிக்கனி போலக் காணவில்லையா? பெரியாழ்வார் *நன்மைதீமைகளொன்று மறியேன் நாரணனென்னு மித்தனையல்லால்* என்று பணித்தருளினர். தேசிகனும் அங்ஙனே பணித்திருந்தாராகில் கேள்வியுண்டோ? "அலம் திஷ்டஹதஸ்ய முத்கராபிகாதேந" என்றதை நினைத்து இந்த விசாரத்தை விட்டிடுவோம். "ஆசார்யஸேவா ஸக்தேந ரங்கதாம்நி வ்யவிக்க்யத" என்றோ, "ஆசார்ய லப்தஜ்ஞாநேந ரங்கதாம்நி வ்யவிக்க்யத" என்றோ ச்லோகமியற்றி யிருந்தாராகில் கேள்வியுண்டோ? *விசுத்த தேசிகவதா ரங்கதாம்நி என்கையாலே ஸ்வாமி தாம் திருவரங்க பெழுந்தருளித் தூய நல்லாசிரியரைப் பணிந்து [நன்றுந்தீது முரைக்கவல்ல ஆசாரியரைப் பணிந்து] தூய்மைபெற்றாரென்பது ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா? வேறு யாராவது இங்ஙனே பணித்தவருளரோ? உளரெனில் உரைக்கலாம். "ரங்காஸ்தாநே...வித்வத் ஸேவா நிரதமநஸா வேங்கடேசேந" என்றோ வேறுவிதமாகவோ பணித்திருந்தால் கேள்வியுண்டோ? ஸ்ரீரங்கத்தில் ரஸிகவித்வான்களை ஸேவித்து அதனால் மனத்திலிருந்த கல்மஷமும் களங்கமும் தீரப்பெற்றேனென்று வெட்டவெளிச்சமாகக் காட்டக்கூடிய சப்த விந்யாஸம் செய்தருளியிருப்பதை ஒருவரெடுத் துரைக்கவேணுமா? இந்த ப்ரஸ்தாவங்களை இனி ஒருகாலும் செய்யோம். "ஆம்ரேடிதம் த்விஸ்த்ரிருக்தம்" என்று அமர

கோஶம். இது த்வி: த்ரி: ப்ரஸ்தாவித்ததல்ல: விம்ஶதிவாரம் த்ரிம்ஶத்வாரம் என்னலாம். இதற்கு இப்போது முற்றுப்புள்ளி யிட்டாயிற்று.

பரகதஸ்வீகார மென்றெடுத்து இதுதான் தேசிகஸித்தாந்தம், இதுவேதான் எங்கள் ஸித்தாந்தமும்—என்று இன்றுகவெழுதுகின்ற மதுராந்தகம் வித்வான் இவ் விஷயத்தில் ப்ராமாணிகரானதுபோல மற்றவிஷயங்களிலும் ப்ராமாணிகராக ஆய் விட்டால் க்ஷேமப்படுவர்—என்று ஸ்ரீமதுபயவே. ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶந பத்ராதிப ஸ்வாமியும், வேளுக்குடி வாகம்ருதவர்ஷி ஸ்வாமியும் கோயிலில் உபந்யஸித்ததாகக் கேள்விப் பட்டோம். இதை வாகம்ருதவர்ஷிஸ்வாமி இவரிடத்தில் நேராகவே ஸாதித்ததாகவுங் கேள்விப்பட்டோம். இல்லையில்லை, இல்லவேயில்லை—என்பர் இவர் தாம். மீண்டுமீண்டும் இவர்க்கு மருள்வந்து புகாதபடிக்கும் பாசிபடராதபடிக்கும் இந்தச் சிறிது விளக்கி முடிக்கிறேன். "ஸ்ரீமந்நாராயண சரணௌ ஶரணம் ப்ரபத்யே" என்றும் *உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் நாம் சொல்லுகிறோமேயொழிய, பரமபுருஷன் *த்வாம் அஹம் ஸ்வீகரோமி* என்கிறிலன். ஆகவே, (நம்மிடத்திலுள்ளபற்றுதல்என்னும் பொருளதான) ஸ்வகதஸ்வீகாரம் சேறுகின்றதே யொழிய, இதற்கு மாறான பரகத ஸ்வீகாரம் தேறுவதற்கு வழியே யில்லையே—என்று பலரும் திகைக்கக்கூடும். நமது நண்பரும் நெடுங்காலம் இப்படியேதான் திகைத்து மருண்டிருந்தார். பகவத்விஷயம் கனுக்கண்டறியாதே. "பகற்கண்ட குழியிலே இராவிழுவாரைப்போலே" எனபதற்கு இலக்காய்க்கிடந்த இந்த ஸம்ஸாரியின் வாக்கில் *த்வாமேகம் ஶரணம் வ்ரஜாமி* என்கிற வார்த்தை ஒருநாளிலே வெளிவருவதானது அப் பரமபுருஷனுடைய அநாதி க்ருஷி பலமென்றும், 'க்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்' என்கிற ஸ்ரீமல்லோகாசார்ய ஸ்ரீஸூக்தியின் ப்ரதிச்சந்தமாகவே தேசிகன் *நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகிலநிர்மாண நிபுண:* என்று அருளினர் என்றும் நாம் பலகால் எழுதியிருந்தோம். ஹேது:, காரணம் இத்யாதி பதங்களைவிட்டு நிதாநம் என்கிற பதத்தை ஸ்வாமி தேசிகன் கைக்கொண்டதை நோக்கவேணுமென்றும் பலகால் எழுதியிருந்தோம். வாயைக் கையைத் திறக்கவில்லை. யார்! நமது நண்பர்தாம். இப்போது "பரகதஸ்வீகாரடலீபூத ஸ்வகதஸ்வீகார......" இத்யாதி ஸ்ரீவசநபூஷணமீமாம்ஸாபாஷ்ய ஸூக்தி ஸநாதமான ஸ்ரீமத் சிறுபுலியூர் ஸ்வாமி திவ்ய ஸூக்தியினால் தெளிவுபெற்றது பகவத் பாகவத ஆசார்ய கடாக்ஷவிஶேஷ பலபூதமே. கீதையில் *அநந்ய சேதாஸ்ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த!* என்ற ச்லோகத்தின் பாஷ்ய ஸூக்தியையும் தாத்பர்யசந்த்ரிகா ஸூக்தியையும் இவர்க்கு எத்தனைதடவை யெடுத்துக்காட்டியிருக்கிறோம் தெரியுமா? "தத்வியோகம் 'அஸஹமாந:' அஹமேவ தம் வ்ருணே' என்றும், "அத்யர்த்த மத் ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி,, என்றுமுள்ள கீதா பாஷ்ய ஸ்ரீஸூக்திகளால் நெடுநாள் தெளிவு பெறாதவிவர் இப்போது தெளிந்தது அஹோபாக்ய மஹோபாக்யம்! 'உபாயஸ் ஸ்வப்ராப்தே:* இத்யாதி ச்லோகம் காலக்ஷேபத்தில் வரும் போது "ப்ராசீநாவீதீ பூத்வா,, இத்யலம்.

ஆரியர்காள்! இந்த நமது நூலுக்கு முன்னே ஸம்ஸ்க்ருதபாஷையில் ஸதநுஷ்டாநதர்ப்பணரக்ஷணம் என்கிற நூல் எழுதப்பட்டு அது தேவநாகரலிபியில் அச்

சிடப்பட்டு வருகின்றதென்றும், அது நமது வைதிகமநோஹரா பத்ரிகையின் வாயி லாக வெளிவருமென்றும் முந்துறமுன்னமே தெரிவித்திருக்கிறோம். அச்சுக்கூடத்தின் அஸௌகரியத்தினால் அது சிறிது விலம்பிக்கிறது. 19-9-1972 தேதியில் "பரிதாவி ஸம்வத்ஸரீய ஸ்ரீநிகமாந்த மஹாகுரு மஹோத்ஸவ ஸ்மாரகபுஷ்பாஞ்ஜலி:-ஸ்ரீலோகா சார்யஸித்தாந்த ஸார:-வைதிக மநோஹராநுபந்த:" என்று வெளியிட்டுள்ள அடி யேன்து ஸம்ஸ்க்ருதநூல் உலகம் பரவியுள்ளது. அது அறுபத்து நான்கு பக்கங்களுள் கொண்டது. அதில், நாற்பத்திரண்டாவது பக்கத்தில்

மத்யே ப்ராஸங்கிகம் இதம் அவதேயம்.
(ஸ்லோகம்) மதுராந்தகவீரராகவாபித வித்வத்வரபத்ரிகாகதாந்,
சதுரோ விஷயாந் பராம்ருஶந் விதுநோதி ப்ரதிவாதிபீகர:.]

என்று மகுடமிட்டு மேலே ப்ரதிஜ்ஞா பரிபாலனம் பண்ணியிருக்கிறேன். எதுவும் இவரது திருமாளிகையில் கோயிலாழ்வாரில் திருப்பள்ளி கொண்டிருக்கின்றது. மேன் மேலும் எழுதிக்கொண்டு போவதில் யாதுபயன்? ஸ்ரீமத் சிறுப்புலியூர் ஸ்வாமியின் ஸத நுஷ்டான தர்ப்பணக்ரந்தம் அதிதராம் விபுலம் ஏகதேசம் வெளிவந்துள்ளது. அதை யும் நமது நண்பர் பூர்த்தியாக ஸேவித்தவரல்லர் புண்ட்ரவிஷயத்தையே ப்ரதாந மாகக் கொண்டார். ஸர்ப்பத்தின் படத்தில் திகழ்வது எந்த ஆகாரமாக வுள்ளதென் பதை உலகம் நிச்சலும் கண்டுவருகிறது. நீதிமன்றங்களில் தென்கலை வடகலை சின் னங்களுக்கு ஒய்மார்க்கு Y=யூமார்க்கு U. என்று ஸங்கேதமிட்டிருக்கிறார்கள். பாம் பின்படத்தில் யூ மார்க்கா காண்கிறது? அந்தசின்னத்தைக் காணும்போது ஹரிபாதஸ் மரணம் வருவதற்கு ப்ரஸக்திலேஶமாவது உண்டா? அதற்கு ஸ்வஸ்திகமென்று பெயர். "இனத்துத்தியணிபணம்" இத்யாதி திவ்யஸூக்திகளில் துத்தியெனப் படுவது அதுவன்று. பணிராஜன் திருமுகத்தை உற்று நோக்கினால் ஹரிபாத த்வயாகார மான ரேகாவிசேஷம் தெரியவரும். ஒவ்வொரு விஷயத்திலும் மநஸ்கரித்து அப்ராமாணிக ஸரணியையே இவர் கைப்பற்றியிருப்பதனால் இந்த நமது நூலை இன்னமும் வளரவிடு வதில் தற்காலம் விருப்பமற்றோம்.

வைச்வதேவ, கைவல்ய விஷயங்களில் கேண்மின்; ஶாரீரகமீமாம்ஸையில் மூன்றுமத்யாயத்தின் முடிவில் புருஷார்த்தாதிகரண மென்று ஓரதிகரண முள்ளது. அதன் ப்ரமேயத்தை ஸ்ரீபாஷ்யாதிகாரியான தாம் ஏற்கனவே உணர்ந்திருப்பர். மீண் டும் பரிசீலிப்பது

கைவல்ய விஷயத்தில் வடமொழி தென்மொழிகளில் பலகால் பலநூல்களில் எழுதியிருக்கிறேன். அதுகிடக்க. ப்ரக்ருதம் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகையில் ஸ்ரீமதுபயவே, பத்ராதிப ஸ்வாமி கீதாவியாக்கியானப் பகுதியில் கைவல்ய ஸித்தாஞ் ஜன மென்று (கிஞ்சித்ஸாவஶேஷமாக) வெளியிட்டுவருமது பண்டிதோத்தமர்களால் போற்றத்தக்கதாய் விளங்குகின்றது. அந்த ஸ்வாமி [புத்தூர் அட்வகேட் S.K.ஸ்வாமி]

அதைச் சில மஹாஸபைகளில் உபந்யஸிக்கக் கேட்டவர்கள் அபேத்யமாயுள்ள தென்று ப்ரஶம்ஸித்து வருகிறார்கள்: ஓரிடத்தில் நம் மதுராந்தகம் நண்பரும் வீற்றிருந்து கேட்டருளித் தலைதுலுக்கி உகந்ததாகப் பலர்சொல்லக் கேட்டிருக்கிறேன். அது உபந்யாஸத்தளவிலே நில்லாமல் அனைவர்க்கும் எளிதாகக் கிடைக்குமாறு ப்ரகாசிதமாயிருப்பதால் அது கொண்டு நம் மதுராந்தக நண்பர் நன்கு தெளியலாம் அதில் தமக்குத் தெளிவு பிறக்க வில்லையானால், அதைச் சிறிது விவரித்துத் தெரிவித்தால் உடனே நற்றெளிவு பிறப்பிக்கத் தடையிராது.

# நிகமன விஜ்ஞாபனம்

திருவரங்கம் பெரியகோயிலில் 1936 ஆம் ஆண்டில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷண ஸபையின் பொன்விழாக் கொண்டாட்டம் (5-5-66 To 8-5 66 மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதற்கு நீநீழ் நினைவுமலராக ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ரக்ஷையென்னு மொருநூலை [இரண்டு பரிச்சேதங்கள்] எழுதி வெளியிட்டேனடியேன். அதில் முதல்பரிச்சேதம் மட்டும் அதிகமான பிரதிகள் அச்சிடப்பட்டு மிகுந்திருந்த படியால் அஃது இத்தோடும் சேர்த்து (200 காபி) வெளியிடலாகிறது அந்த பரிச்சேதமும் நமது நண்பர்க்கு அனேகவிஷயங்களில் நல்ல தெளிவைப் பிறப்பிக்கும்.

"நான்தெளிந்தேயிருக்கிறேன்; கலங்கியிருக்கிற நீங்கள் தாம் தெளிவுபெறவேணும்" என்று நமது மதுராந்தகநண்பர் ஸாதிப்பரேல், ஸந்தோஷம், பரமஸந்தோஷம். இந்தப்புத்தகத்தில் நாம் தெரிவித்துள்ளவற்றில் ஒன்றையும் விடாமல் ஒவ்வொன்றிலும் தாம்தெளிவுபெற்றிருக்கிற படியை இரண்டொரு மாதத்திற்குள் உலகறியச் செய்யட்டும்; "இப்போதுதான் நற்றெளிவுபெற்றேன்" என்று நான் (P. B. A) நாற்றிசையும் பறை சாற்றச்கடவேன். இரண்டத்தொன்று முடிவுபெறவேணும். இவர்க்கும் அடியேனுக்கும் பரமாப்தரான ஸ்ரீமதுபயவே. வாகம்ருதவர்ஷி ஸ்வாமி தடஸ்தராய் நின்று சாந்தி பெறுவித்தருளவேணும். ... ... ...

# பூவிருந்தவல்லியில் மஹா ஸம்ப்ரோக்ஷணம்

(காஞ்சீபுரம் தி. அ. மடவிளாகம் பாஷ்யமையங்கார்)

(ராமாநுஜமுநேர்மாந்யம்) என்று போற்றப்படுகின்ற திருக்கச்சிநம்பிகளின் திருவவதாரஸ்தலமான பூவிருந்தவல்லியில் இரண்டு வருஷமாக ஜீர்ணோத்தாரண திருப்பணி விசேஷமாக நடந்து வந்ததென்பதை அனைவருமறிவர். சென்ற வருஷம் மாசி மாதத்தில் திருக்கச்சிநம்பிகளுக்கு நடைபெறவேண்டிய வருஷோத்ஸவமும் ஸன்னிதிக்குள்ளேயே ஸங்க்ரஹமாக நடைபெற்று வந்தது. இந்த ஸம்வத்ஸர திரு வவதார மஹோத்ஸவம் நன்கு நடைபெற எம்பெருமான் திருவுள்ளம்பற்றி ஸம்ப் ரோக்ஷண வைபவங்கள் நேற்றைய 27—1—78 முதல் 29—1—78வரை நடை பெற்றன. ஸம்ப்ரோக்ஷணத்தில் வைகானஸ ஆகம அர்ச்சகர்கள், வேதபாராயண அத்யாபக ஸ்வாமிகள் பலர் எழுந்தருளியிருந்தனர். 28—1—78 அன்று இரவு ஸ்ரீ உ. வே. வித்வான் வாகம்ருதவர்ஷி ஸ்வாமியின் உபன்யாஸம் நடைபெற்றது. ஸம்ப்ரோக்ஷணத்தன்று (29—1—78) காலை ராமாநுஜ கருணாலய மகாநாடு ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸ்ரீமான் உ. வே. மஹா வித்வான் பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி. ஸ்ரீமான் உ.வே. அக்காரக்கனி ஸம்பத் குமாராசாரியார் ஸ்வாமி ஸ்ரீமான் உ.வே. புத்தூர் வக்கீல் ஸ்வாமி ஆகியோர் முன் னிலையில் விமரிசையாக நடைபெற்றது. விழாவில் ஹிந்து அறநிலைய ஆணையர் ஸ்ரீமான் பால சுப்ரமணியம் I.A.S. மாவட்டத் துணை ஆணையாளர் ஸ்ரீ. அர்ச்சுனன் ஆகியோர் கலந்துகொண்டு சிறப்பித்தனர். மாநாட்டில் ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் ஸ்தல சயனத்துறைவார் ஸ்வாமி எழுதிய திருக்கச்சி நம்பிகள் வைபவ புஸ்தகம் வெளி யிடப்பட்டது. புஸ்தகத்தை வெளியிட பொருளுதவி செய்தவரும் ஸம்ப்ரோக்ஷண வைபவங்களை முன்னின்று சிறப்பித்தவருமான சென்னை நமச்சிவாய செட்டியார் அவர் கள் ஸன்னிதியில் மேன்மேலும் பல கைங்கர்யங்கள் செய்ய இச்சித்துள்ளார். ததியாரா தன வைபவங்களை ஸ்ரீமான் உ.வே. T. A. P. ஸ்வாமி நடத்திச் சிறப்பித்து வைத்தார். இரவு (கருடசேவை) பெருமாள் புறப்பாட்டுடன் ஸம்ப்ரோக்ஷண வைபவம் நிறைவு பெற்றது ... ... ... ...

# அகில பாரதீய ஸம்ஸ்க்ருத மஹாமண்டலம்

உலகப்ரஸித்தமான பண்டரிபுரத்தில் இப்பெயர் கொண்டதோர் ஸ்தாபனம் இருக் கிறது. வடமொழியில் அபிமானம்கொண்டுள்ள அனைவரும் இதில் அங்கத்தினராகச் சேரலாம். குடியரசுத் தலைவர், துணைத்தலைவர், எல்லா ஸம்ப்ரதாய ஆசாரியர்கள், பல ப்ராந்தங்களின் முதல் மந்திரிகள், கல்வி மந்திரிகள், பல்கலைக் கழகங்களின் துணைவேந்தர்கள் ஆகிய பற்பலபெரியோர்கள் இதில் தொடர்பு கொண்டிருக்கிறார்கள்.

இம்மண்டலத்தின் ஆறுவது கூட்டம் திருப்பதியில் மார்ச்சு மாதம் 11, 12, 13 தேதிகளில் நடப்பதாகவும், அதற்கு ஸம்ஸ்க்ருத அபிமானிகள் யாவரும் அவசியம் விஜயம்செய்து ஆதரிக்கவேணுமென்றும் அப்போது விசேஷ விவரங்களுக்கு எழுதிக் கொள்ளலாமென்றும் மண்டலத்தின் காரியதரிசி விண்ணப்பித்துக் கொள்கிறார்:—

விலாசம்:— CHIEF SECRETARY,
Akhila Bharatiya Sanskrit Mahamandal,
Pandharpur (Maharashtra)

